6-ம் பக்கம்
காக்கையும்
இலக்கியமும்
*
10-ம் பக்கம்
அதிசயப்பிறவி
*

# சிவாஜி

13-ம் பக்கம்
விடுதலை
*
9-ம் பக்கம்
என் அண்ணன்
*

ஆசிரியர் :
டி. சிவஞானம்

The ‘SHIVAJI’-Published Every Sunday

ஞாயிறு வெளியீடு

மாலை 10 | திருச்சி 18—3—1945 தாரண-ஸு பங்குனி-மீ 5-உ ஞாயிற்றுக்கிழமை | மணி 17



பெல்ஜிய நகர் ஒன்றை
அமெரிக்கத் துருப்புகள் மீட்டபோது,
காப்பாற்றப்பட்ட அனாதைகள்



பிரேஞ்சு அனாதைகளும்
சிவிலியன்களும் யுத்த அபாய
எல்லையை விட்டுக்கடத்தப்படும் காட்சி.



காயம்பட்ட அல்சேஷியன் ஸ்திரீ ஒருத்தி தன் குழந்தையுடன் காத்துக்கொண்டிருக்கிறாள்
அமெரிக்க சேனையின் மீட்சி வண்டியை எதிர் நோக்கி.

# அகமும் புறமும்

## ருஷ்யாவில் சினிமாக்கலை வளர்ச்சியைப் பாருங்கள்!

ருஷ்யாவில் சினிமாக் கலைக் கழகம் ஒன்றுண்டு. அதை சோவியத் அரசாங்கமே நடத்துகிறது. அதில் ஆண்டுதோறும் நூற்றுக்கணக்கான நடிகர், காமிராமென், பிலிம் டெக்னிஷியன்கள் ஆகியோர் பயிற்சிபெறுகின்றனர். இக் கழகத்தின் ஆதி ஸ்தாபகர், பட டைரக்டரும் நடிகருமான விலாடிமீர் கார்டின் என்பவர். சென்ற ஆண்டு இக்கழகத்தின் 25வது ஆண்டுவிழா நடந்தது.

இக்கழகம் முதலில் நடிகர்களுக்கு மட்டுமே பயிற்சியளித்தது. ஆயினும் உபாத்திமார்கள் காமிராமுன் எவ்விதம் நடிக்கவேண்டுமென்பதைக் கற்றுக் கொடுத்ததும் தம் வேலை முடிந்துவிட்டதெனக் கருதவில்லை. தாம் முதலில் சினிமாக்கலையின் எல்லா அம்சங்களையும் நன்கு கற்று தம் தொழிலில் விஞ்ஞான முறைகளைக் கையாண்டனர். காமிராக் கலை வளர்ச்சியடைய அடைய டைரக்டர்கள் படத்தின் கலையம்சத்தை ஒழுங்குசெய்யவேண்டியது அவசியமாயிற்று. அதன்பொருட்டு டைரக்டர் பயிற்சியும் அளிக்கப்படலாயிற்று. சோவியத் பிலிம் தொழிலில் இன்று விளங்குவோரிற் பெரும்பாலோர் இக்கழகத்தில் டைரக்டர் பயிற்சிபெற்றவர்களே. யுத்த முனைகளில் படமெடுக்கும் காமிராக்காரர்களிற் பெரும்பாலோரும் இங்கு பயிற்சிபெற்றவர்களே. ஸ்கிரிப்ட்ரைட்டர்கள், சினேரியோ எழுதுவோர் ஆகியோரும் இங்கு பயிற்சி பெறுகின்றனர்.

மகாயுத்தம் ஆரம்பமாகுமுன், இக்கழகத்திற்கெனச் சிறந்த கட்டிடமொன்று அமைக்கப்பட்டது. அதில் வகுப்பு நடக்கும் அறைகள், பொது சொற்பொழிவு கூடம், பிலிம் ஸ்டுடியோ, புத்தகசாலை, பிலிம்சாலை ஆகியன நன்கமைந்துள்ளன. புத்தகசாலையில் சினிமாப் படக் கலைபற்றிய வரலாறுகளைக் கூறும் புத்தகங்கள் பல உள்ளன. 3000 சோவியத் பிலிம்களும் இதர நாட்டு பிலிம்களும் சேகரித்து வைக்கப்பட்டுள்ளது.

ஜர்மன் சேனைகள் படையெடுத்து வந்தபோது, இக்கழகம் மாஸ்கோவிலிருந்து சோவியத் ஆசியாவிலுள்ள அலம் அதாவுக்கு மாற்றப்பட்டது. யுத்த காலத்திலும் அதன் வேலை தடங்கலின்றி நடந்துவந்திருக்கிறது.

இன்று உலகிலேயே மிகப்பெரிய சினிமாக்கலைப் பயிற்சிக் கழகம் இதுவேயெனக் கூறப்படுகிறது.

இந்திய பட முதலாளிகளே! 40 கோடி மக்கள் வாழும் இந்நாட்டிலே இத்தகைய கலைக் கழகமொன்று இருக்க வேண்டாமா?

## இந்திய நர்சுகளுக்குப் பயிற்சி

யுத்தத்திற்குப் பின் ஏற்படப்போகும் நிர்மாண வேலைகளுக்குரிய திட்டங்கள் வேகமாக நடந்துவருகின்றன. நாடெங்கும் ஆஸ்பத்திரிகள் கட்டுவதற்கும், ஆஸ்பத்திரிகளை நடத்துவதற்குரிய வைத்தியர்களைத் தயார்செய்ய வைத்திய கலாசாலைகளைப் பெருக்குவதற்கும், ஆஸ்பத்திரி வேலைக்கு இன்றியமையாத நர்சுகளுக்குப் பயிற்சியளிப்பதற்கும் ஏற்பாடுகள் நடந்துவருகின்றன. நமது நாட்டில் ஆஸ்பத்திரிகளில் உயர்தர நர்சுகளாக வேலை பார்ப்போர் பெரும்பாலும் பறங்கியரே. இந்தியப் பெண்கள் மேன்மேலும் இத்தொழிலை மேற்கொள்ள வேண்டும். போதிய இந்திய நர்சுகள் கிடைப்பதில்லை என்னும் குறை தீர வேண்டும். அரசாங்கத்தார் நர்சுகளுக்கு உயர்தரப் பயிற்சியளிப்பதன் பொருட்டு, சிலரை பிரிட்டனிலுள்ள உயர்தர ஆஸ்பத்திரிகளுக்கு அனுப்ப திட்டமொன்று போட்டுள்ளனர். லண்டன் மாநகரிலுள்ள ஆறு ஆஸ்பத்திரிகளும், மத்தியப் பிரதேசத்திலுள்ள மூன்று ஆஸ்பத்திரிகளும் இந்திய நர்சுகளுக்குப் பயிற்சியளிக்க ஒப்புக்கொண்டிருக்கின்றன. யுத்த காலத்தில் வைத்திய சாஸ்திரத்திலும் சிகிச்சை முறையிலும் அதிசயிக்கத்தக்க முன்னேற்றங்கள் ஏற்பட்டிருப்பதால் இந்திய நர்சுகள் புதுமுறைகளில் பயிற்சி பெறுவதற்கு இது ஒரு சிறந்த சந்தர்ப்பமாகும். படித்த பெண்கள் இப் பயிற்சி பெற முன்வருவரென நம்புகிறோம். நம்முடைய தலைவர்களும் இவ்விஷயமாக முயற்சியெடுக்கவேண்டும்.

## இறக்குமதி ஏன்?

மக்களின் நலனைக் கருதும் எந்த அரசாங்கமும் நாட்டில் தலையெடுத்து வரும் தொழில்களுக்கு ஆதரவளிக்கக் கடமைப்பட்டிருக்கிறது. யுத்தகாலத்தில் அயல்நாடுகளிலிருந்து பண்டங்கள் பெருவாரியாக இறக்குமதியாவது தடைப்பட்டிருப்பதால், சாதாரண வாழ்க்கைக்குத் தேவையான பல பண்டங்களை இப்போது நம்முடைய தொழில் சீமான்கள் செய்துவருகின்றனர். இத்தொழில்கள் தலையெடுத்து அயல்நாட்டுத் தொழில்களுடன் போட்டிபோட்டு நிற்கும்படியான ஆற்றல் பெறும்வரையில் இவற்றை ஆதரித்துப் போஷித்தால் நாட்டில் சுதேசத் தொழில்கள் வளர்ச்சியடைந்து நாட்டின் செல்வம் பெருகும். ஒவ்வொரு நாட்டிலும் தொழில்கள் இங்ஙனமாகத்தான் ஆதரிக்கப்பட்டு வளர்ச்சியடைந்துள்ளன. இந்த யுத்த காலத்தில் கானடாவிலும், ஆஸ்திரேலியாவிலும் இங்ஙனமாகவே பல தொழில்கள் வளர்ச்சியடைந்துள்ளன. சுயேச்சையான அயல்நாட்டு வியாபாரம் தடைப்பட்டுள்ள இச்சமயத்தைப் பயன்படுத்த சுதேசத் தொழில் விளர்ச்சிக்குத் தேவையான இயந்திர சாதனங்கள், தொழில் சாஸ்திர உதவி முதலியவற்றை இறக்குமதிசெய்து இவ்வரசாங்கங்கள் பல புதிய தொழில்களை அதிசயிக்கத்தக்கமுறையில் வளர்த்துள்ளன. ஆனால் நம்முடைய இந்திய அரசாங்கம் என்ன செய்திருக்கிறது? நாட்டுக்கு முக்கியமான பல புதுத் தொழில்களை நடத்த முன்வந்த முதலாளிகளுக்கு ஆதரவளிக்க மறுத்தனர். ஆயினும் எப்படியோ தட்டுத் தடுமாறிப் பல புதுத்தொழில்களை ஆரம்பித்து நடத்திவருகின்றனர் நம்முடைய முதலாளிகள். வாழ்க்கைக்குத் தேவையான பல பண்டங்கள் இப்போது இங்கே உற்பத்தியாகிவருகின்றன. இன்னும் சிறிதுகாலம் அயல்நாடுகளின் போட்டியில்லாமலிருந்தால் இத்தொழில்கள் தலையெடுத்துவிடுமென அனைவரும் எதிர்பார்க்கின்றனர். ஆனால் இந்திய அரசாங்கத்தார், இப் புதுத் தொழில்கள் தலையெடுக்கமுடியாதபடி இவை உற்பத்திசெய்ய முயன்றுவரும் பொருள்களையே இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்துவருகின்றனர். இதென்ன விபரீதமென இந்தியத் தலைவர்கள் கூக்குரலிட்டால், நாட்டுக்குத் தேவையான இப்பொருள்கள் இன்னும் அமோகமாக உற்பத்தியாகவில்லையாதலால் தேவையின் பொருட்டே இறக்குமதி செய்வதாகக் கூறுகின்றனர். நம்முடைய தொழில் சீமான்களும், தேசீயத் தலைவர்களும் இறக்குமதியே கூடாதெனக் கூறவில்லை. நாட்டில் இப்பண்டங்களை உற்பத்திசெய்ய என்ன செலவாகிறதோ, அந்த அளவுக்கேனும் இறக்குமதியாகும் பண்டங்களின் விலை இருக்கவேண்டும் என்கின்றனர். இங்ஙனமில்லாவிடின், அதாவது சுதேசத் தொழில்களின் உற்பத்திச் செலவுக்கும் குறைவாக அயல்நாட்டுப் பண்டங்கள் இறக்குமதியாகி இங்கே விற்கப்படுமானால், இச் சுதேசத் தொழில்கள் தலைதூக்குவது எங்ஙனம்? சுதேச நலன்களைப் பாதுகாக்கும் அரசாங்கத்தார் இங்ஙனம் நேரிடாமல் பார்த்துக்கொள்வர். ஆனால் நம்முடைய அரசாங்கத்தாருக்கு இதைப்பற்றி அக்கறை இல்லை. இப்போக்கைத்தான் நம்முடைய தலைவர்கள் கண்டிக்கின்றனர்.

வாழ்க்கைக்குத் தேவையான பொருள்கள் அனைவருக்கும் தாராளமாகக் கிடைக்கவேண்டியே இறக்குமதி செய்வதாக அரசாங்கத்தார் கூறுகின்றனர். இவ்விஷயத்தில் இவ்வளவு அக்கறை காட்டும் அரசாங்கத்தார், சுதேசக் கைத்தொழில்களின் வளர்ச்சிக்கு இன்றியமையாத சில இயந்திர சாதனங்களையும், சில மூலப்பொருள்களையும் இறக்குமதிசெய்யும் விஷயத்திலும் சிறிது அக்கறையாவது காட்டவேண்டுமல்லவா? யுத்தகாலத்தில் போட்டி அதிகமில்லாத தருணத்தில் இத்தொழில்களை ஆதரித்து போஷித்தாலல்லவா, நாளை யுத்தம் முடிந்து அயல்நாட்டுப்போட்டி பலக்கும்போது இவை சமாளித்து நிற்கமுடியும்? அரசாங்கம் இத்தொழில்களின் வளர்ச்சிக்குரிய மூலப்பொருள்களையும் இந்திய சாதனங்களையும் தருவிக்கும் விஷயத்தில் முட்டுக்கட்டை போடுகிறதென்றும், சாதாரண வாழ்க்கைக்குரிய பண்டங்கள் இறக்குமதியாகும்போது அவற்றின் மீது சொற்ப வரி விதிக்கையில், தொழில்களுக்கு இன்றியமையாத சாதனங்கள் இறக்குமதியாகும்போது அவற்றின்மீது அதிக இறக்குமதி வரி விதிக்கின்றதென்றும் நம் தலைவர்கள் புகார் செய்கின்றனர். தேசீய நலன் கருதும் எந்த அரசாங்கமும் இங்ஙனம் செய்யாதே? இப்போது நடக்கும் அரசாங்கம் தேசீய அரசாங்கமே என வேவல் கூறின அரசாங்கம் ஏன் இங்ஙனம் தேச நலன்களைப் பாதிக்கும் காரியங்களைச் செய்யவேண்டும்? அரசாங்கம் யுத்தத்திற்கோ, ராணுவத்திற்கோ தேவையான பொருள்களைத் தாராளமாக இறக்குமதி செய்துகொள்ளட்டும். ஆனால் பொதுமக்களின் தேவைகளுக்குரிய பண்டங்கள் விஷயத்தில், தேசீய நலனை முதலில் கருத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இப்பண்டங்களை இறக்குமதி செய்வதன்மூலம், அயல்நாட்டு முதலாளிகளுக்கும் வர்த்தகர்களுக்கும் இடம் தந்துவிடுகிறோம். அவர்கள் இங்கே தூர்ந்துவிட்டால், இந்தியத் தொழில்கள் தலையெடுக்காதபடி சூழ்ச்சி செய்வர். மீண்டும் பழைய கதைதான். இந்தியத்தொழில்கள் அழியும். இந்திய அரசாங்கத்தின் இறக்குமதிக் கொள்கை இங்ஙனமாகவே முடியும். வேவலின் 'தேசீய அரசாங்கம்' தேசத்திற்கு விரோதமான காரியம் செய்வதிலா ஈடுபடவேண்டும்?

சில நாட்களுக்கு முன்பு, எமரி துரையவர்கள், இந்தியத் தொழில்கள், வியாபாரம்போன்ற விஷயங்களில் பிரிட்டிஷ் அரசாங்கம் தலையிடுவதில்லையென்றும் ஏதாவது பிளவு ஏற்பட்டால் இந்தியாவிலுள்ள 'தேசீய அரசாங்கமே' ஜவாப்தாரி எனக் கூறியிருப்பதாக நம்முடைய விஞ்ஞானிகள் அறிவிக்கின்றனர். எமரி சொல்வது உண்மையாயின், இந்திய அரசாங்கம், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தூண்டுதலில்லாமலிருந்தும், நாட்டின்

(15-ம் பக்கம் பார்க்க.)

# புது உலகம்

## இந்தியாவும் சான் பிரான்சிஸ்கோ மகாநாடும்

உலகப் பாதுகாப்பு விஷயங்களை ஆராயப்போகும் சான் பிரான்ஸிஸ்கோ மகாநாட்டுக்கு 45 நாடுகள் அழைக்கப் பட்டுள்ளன. அவற்றுள் இந்தியாவும் ஒன்று. பிரிட்டனும் சரி, அமெரிக்காவும் சரி, இவ்வுலக யுத்தத்திற்காக இந்தியா மகத்தான தியாகங்கள் செய்துள்ளது என்பதை ஏற்றுக் கொள்கின்றன. ஆதலால் அதுவும் அழைக்கப்படுவது நியாயமேயாகும். ஆனால் இந்த அழைப்பினால் நம் நாடு பயனடையாத நிலைமையில் இருப்பது பற்றித்தான் மிகவும் வருத்தமாக இருக்கிறது. முதலாவது, இந்த மகாநாட்டிற்குச் செல்லும் பிரதிநிதிகள் மற்ற நாடுகளைப் போல மக்களின் பிரதிநிதிகளாக இருக்கமாட்டார்கள். மக்களுக்குப் பொறுப்பேற்காமல் தனியரசு செலுத்தும் இந்திய அரசாங்கம் தன்னால் நியமிக்கப்பட்ட சர். ராமசுவாமி முதலியார், சர், பிரோஸ் நூன் கான் போன்றவர்களையே அனுப்புமென ஏற்கெனவே அறிவித்துவிட்டது. இந்திய அரசாங்கம் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஓர் அங்கமே யாதலால், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கருத்துப்படியே அதன் பிரதிநிதிகளும் நடந்துகொள்ள வேண்டும். அயல் நாட்டுக்கு அடிமைப் பட்டுள்ள நாட்டுக்குத் தனிப் போக்கு ஏது?

இரண்டாவதாக, இவ்வரசாங்கப் பிரதிநிதிகளும் சுயமாக ஒன்றும் செய்ய முடியாது. பிரிட்டன் பேரம் செய்யும் சக்தியைப் பெருக்கிக்கொள்ள பிரான்ஸிஸ்கோ மகாநாட்டுக்கு முன் லண்டனில் ஏகாதிபத்திய மகாநாடொன்று கூட்டி, அதில் ஏகாதிபத்தியத்திற் குள்ளடங்கிய நாடுகள் எவ்விதமாக உலக மகாநாட்டில் நடந்துகொள்ள வேண்டுமென்பது நிர்ணயிக்கப்படும். இந்தியாவின் இரண்டு வோட்டுக்களும் பிரிட்டனுக்கே [illegible]க்கமளிக்கும். கானடா இந்த ஏகாதிபத்திய மகாநாட்டுக்கு வந்தால், ஏகாதிபத்தியக் கருத்துக்குக் கட்டுப்பட வேண்டியிருக்குமே யெனக் கொண்டு அதற்கு வரப்போவதில்லை என்று அறிவித்துவிட்டது. அடிமைப்பட்ட இந்தியாவுக்கு அச் சுதந்திரமில்லையாதலால், அதன் அரசாங்க பிரதிநிதிகள் பிரிட்டிஷ்அரசாங்கத்துக்கு நல்ல பிள்ளைகளா யிருப்பதுடன், உலக மகாநாட்டிலும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அருமை பெருமைகளைப் பறையறைந்து அதன்பால் வோட்டு செய்வர்.

மூன்றாவதாக, அப்படி இந்த உலக மகாநாட்டில் என்ன செய்யப் போகிறார்கள். முப்பெரியார்கள் யால்ட்டாவில் செய்த தீர்மானத்தையே இதர நாடுகளின் மீது திணிக்கப்போகிறார்கள். அன்றியும், ஏற்கெனவே ஜனாதிபதி ரூஸ்வெல்ட் சொல்லியுள்ளபடி அம் மகாநாட்டில் பெரும்பாலும் ஐரோப்பிய விஷயங்களே கவனிக்கப்படும். தொலைகிழக்கு விஷயங்கள் அத் தொலைகிழக்கிலுள்ள ஆதிபத்திய நாடுகளுக்கே விடப்படும் அதாவது, பிரான்சு, டச்சு, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியங்கள் அப் பிரதேசங்களில் இழந்த காலனிகளை மீண்டும் பெற்று ஏகாதிபத்திய அரசு செலுத்தும். இந்தியாவும் பர்மாவும் முன்போல பிரிட்டனின் தனியுரிமைகளாக இருக்கும்.

சுருங்கக் கூறின் சான்பிரான்ஸிஸ்கோ மகாநாடு உலகை மயக்கப்போகும் மற்றுமொரு மகாநாடாகவே இருக்கும். அதனின்று புது உலகம் பிறக்கப்போவதில்லை. அங்கே இந்தியா போன்ற அடிமை நாடுகள் விடுதலையடைய வேண்டும் என எவரும் முழக்கம் செய்ய விடப்போவதில்லை. நேருவின் குரல் அங்கே கேட்கப்போவதில்லை. ஆனால் இந்திய மக்களுக்கு ஆறுதலளிக்கும் பொருட்டு நேருவின் தங்கையார், விஜய லட்சுமி பண்டிதை மகாநாட்டுக்கு வெளியே பெருமுழக்கம் செய்வாராம்!

## எமரியின் புது உலகம்

புது உலகம் பிரிட்டிஷ் அறிஞர்களான சர். பிராண்டு ரஸ்ஸல், ஆரோல்டு லாஸ்கி, சோரன்சன் முதலியோரின் மூலமாகப் பேசுகின்றது. பிரிட்டிஷ் பத்திரிகைகளான நியூஸ் டேட்ஸ்மன், மான்செஸ்டர் கார்டியன், லண்டன் டைம்ஸ் ஆகியவையும் இப்புது உலகக்குரலை ஓரளவு பிரதிபலிக்கின்றன. லண்டன் டைம்ஸ் கூறுவதைப் பாருங்கள்.

இந்தியாவில் அரசியல் முட்டுக்கட்டை நீடிக்க நீடிக்க வகுப்புத் துவேஷமும் அதிகரித்துக்கொண்டே போகிறது. இந்தியாவுக்கும் பிரிட்டனுக்குமிடையே நல்லெண்ணமும் நேசப்பான்மையும் ஏற்படாவிடின், இந்தியாவுக்கு பிரிட்டன் மீதுள்ள வெறுப்பு உச்ச நிலையடையும். யுத்தத்திற்குப் பின் இரு நாடுகளும் ஒத்துழைப்பதற்குப் பதிலாகப் பிரிந்தே போகும். பிரிட்டன் தன் வாக்குறுதிகளை நிறைவேற்றினாலன்றி இந்தியா பிரிட்டனுடன் ஒத்துழைக்கவோ நிர்மாண வேலைகளில் உதவவோ முன் வரப் போவதில்லை.

ஆனால் செவிடன் காதில் சங்கூதினாற் போல எமரி—சர்ச்சில் காதுகளில் இவ்வித எச்சரிக்கைகளெல்லாம் ஏறப் போவதில்லை. காமன்சு சபையில் இந்தியா விஷயமாகக் கேட்கப்பட்ட கேள்விகளுக்குப் பதிலளித்த எமரி பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மனப்பான்மையை வெளிப்படையாக்கிவிட்டார். எமரியின் புது உலகம் வேறு. அவ்வுலகில் சுதந்திர இந்தியாவுக்கு இடமிராது. அது பிரிட்டிஷ் ஏகாதிபத்திற்கு அடிமைப் பட்டதொரு நாடாகவே இருக்கும். அது தன் எசமான் உத்தரவுப்படி ஏனைய உலக நாடுகளுக்காகத் தன் ரத்தத்தைச் சிந்தவேண்டும். தன் விடுதலையைப் பற்றி கப் சிப்பென்று வாயைப் புதைத்துக்கொண்டு மௌனம் சாதிக்க வேண்டும். வாயைத் திறந்தாலோ பாரத நாட்டுச் சுத்த வீரனாகிய நேருக்கு ஏற்பட்டுள்ள கதிதான்.

## அமெரிக்காவின் புது உலகம்

ஜப்பானியரை விரட்டப் பிலிப்பைன்சு மீது அமெரிக்கா படையெடுத்தபோது அந்த நாட்டை மீட்டதும், பிலிப்பைன்சு மக்களுக்கே அளிக்கப்படுமென ஜனாதிபதி ரூஸ்வெல்ட் வாக்களித்தார். இப்போது பிலிப்பைன்சின் பெரும் பகுதி மீட்கப்பட்டுள்ளது. அவற்றில் பிலிப்பைன்சு அரசாங்கம் நடைபெறுகிறது. பிலிப்பைன்சு குடியரசுத் தலைவர் உஸ்மெனா, யுத்தம் முடிந்து ஜனநாயக ஆட்சி பூரணமாக ஏற்பட்டதும், பிலிப்பைன்சு நாட்டின் சுயேச்சையை அமெரிக்கா பறையறைய வேண்டுமெனக் கேட்டார். அதற்கு, அமெரிக்க ஜனாதிபதி அவ்விதமாகவே ஆகஸ்ட் 14-ந் தேதியன்று பிலிப்பைன்சு பூரண சுயேச்சை பெற்ற நாடென அறிவிக்கப்படுமென உறுதி கூறியிருக்கிறார். உலகில், இத்தனை கஷ்ட நஷ்டங்களுக்குப்பின்னும் ஏகாதிபத்திய பயித்தியங்கள் இருக்கிறார்களாயினும், நல்லெண்ணமும் சுதந்திர உணர்ச்சியு முடைய ஒரு சிலரேனும் இருக்கத்தான் செய்கின்றனர்.

## அமெரிக்காவும் இந்தியாவும்

நெருக்கடியான காலங்களில்தான் பழைய விலங்குகள் நொறுங்குகின்றன. பழங்காலப் பிடிவாதங்களும் குறுகிய மனப் போக்குகளும் சிதறிப் புரட்சிமயமான மாறுதல்கள் ஏற்படுகின்றன. உலக மக்களின் விடுதலைக்கும், புது உலகம் விரைவில் அமைவதற்கும் இன்றியமையாத இம் மாறுதல் இந்தியாவில்மட்டும் ஏற்படாமல் இருந்துவிடுவது நமது துரதிருஷ்டமே. சர்க்காரே பெரிதும் காரணமாகஇருந்துவருகிறது. இந்தியாவில் புதுத்தேர்தல்கள் நடப்பதைத்தடுக்கிறது. உலகெங்கும் இந்நெருக்கடியான காலத்தில்தான் புதுத் தேர்தல்கள் நடக்கின்றன. அவை யுத்த முயற்சிகளுக்கு ஆக்கமே அளிக்கின்றன. ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவில் புதுத் தேர்தல்களைக் கண்டு நடுங்குகிறது. உலகெங்கும், பிரிட்டன் உட்பட, புது நோக்குக்குத் தடை செய்யும் சட்ட திட்டங்கள் மாற்றப்படுகின்றன. ஆனால் யுத்த நெருக்கடியில் சட்டதிட்டங்களைத் தொடக் கூடாதென பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியா விஷயத்தில் மட்டும் கூறுகிறது. இந்த யுத்த நெருக்கடியிலும், அமெரிக்கா என்ன செய்கிறது பாருங்கள். இந்தியா அடிமைப்பட்ட நாடு. சுதந்திர, ஐசுவரிய, அமெரிக்காவுக்கு இந்தியாவின் தயவு தேவையில்லை. ஆயினும், யுத்த விஷயங்களையும், உலகப் புனர் நிர்மாண வேலைகளையும் கவனிக்க வேண்டிய இந்த நெருக்கடியான தருணத்திலும் அமெரிக்கா இந்தியாவின் பால் தன் நல்லெண்ணத்தைக் காட்ட முன்வந்துள்ளது என்றால், அதன் பெருமையை என்னென்று கூறுவது? இதுகாலும் இந்தியர் அமெரிக்காவில் பிரஜா உரிமை பெறும் விஷயத்திலும் அமெரிக்காவில் குடியேறும் விடங்களிலும் பல தடைகள் இருந்து வந்திருக்கின்றன. இப்போது செனட்டு சபையில், இத்தடைகளை நீக்கும் மசோதா ஒன்று பிரேரணை செய்யப்பட்டிருக்கிறது. அதன்படி அமெரிக்காவிலுள்ள இந்தியர் பூரண பிரஜா உரிமை பெறுவர். ஆண்டுதோறும் குறித்த அளவுக்கு இந்தியர் அமெரிக்காவில் குடியேற அனுமதிக்கப்படுவர். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலுள்ள தென்னாப்பிரிக்காவில், இந்தியப் பிரஜைகளுக்கு பிரஜா உரிமைகள் கிடையா. அவர்களுக்கு ஓட்டுரிமை கிடையாது. பிரஷ்டர்போல விலக்கப் படுகின்றனர். ஆஸ்திரேலியாவில் இந்தியர் குடியேற அனுமதிக்கப்படுவதில்லை. ஆயினும் இந்தியா பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் இருந்துகொண்டு பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்காக ரத்தம் சிந்துகிறது! அமெரிக்காவோ இந்தியா அடிமைப்பட்டிருப்பினும், அவர்களை மக்களெனப் பாவித்து உரிமைகளும் அளிக்கிறது. ஜனாதிபதி ரூஸ்வெல்ட் செய்திருப்பதைப் பாருங்கள், அவர் செனெட்டு சபையில் இந்தியர் சார்பாகக் கொண்டு வரப்பட்டுள்ள மசோதாவை ஆதரித்து யுத்த முயற்சிக்காக பெருந்தியாகம் செய்துள்ள இந்தியாவுக்கு விரோதமாக தடைகள் நீக்கப்படுவது நியாயமே என அட்டர்னி ஜனரல் மூலமாக ஒரு ஸ்ரீமுகம் விடுத்துள்ளார்.

# "தபால்கார தாதய்யன்"

3-6-56



—(பூர்ணு)—

முழங்கால் வரை ஒரு முக்கால் 'கால்சரா' சுருட்டிவிட்ட சுருங்கிய சட்டை ஒன்று உடம்பை மறைத்தும் மறைக்காமலும் இருக்கிறது. காலில் 'பூட்ஸ்' இருக்க வேண்டியஇடத்தில் புழுதி. தலையில் காக்கி துணியினுல் தலைப்பாகை. காதில் ஒரு எழுதுகோல். எழுதும் முனையில் ஒரு முள் ஒரு புறமும் மற்றது எதிர்ப்புறமும். கையில் ஒரு கட்டு காகிதங்கள், மணியார்டர்கள். தலையில் தலைப்பாகைக்குமேல் பார்சல் மூட்டைகள். இவன் தான் எங்களூர் தபால்காரன்.

தபால்கார தாதய்யா பிள்ளை தங்கமான மனிதன் தான். வயது நாற்பதிருக்கும். அவன் அணிந்திருக்கும் பாதி மூக்கு கண்ணுடி வழியாக பார்த்தால் அவனுக்கு முழு உலகமும் தெரியும். பதினெரு மணிக்கு எங்கள் தெருவில் நுழைந்தானுனல் மணி இரண்டாகும் அவன்வெளியேவர. எங்கள் தெருவில் வீடுகள் அதிகமில்லை. அன்றைய தபால்களை அன்றே பட்டு வாடா செய்வது அவன் வழக்கமில்லை.

ஆபீஸில் தபால் பிரித்துக்கொண்டிருக்கும்போது "தாதய்யா தபால் உண்டா நம் வீட்டிற்கு"? என்றுல் உடனே ஆளைக்கூட பார்க்காமல் "இல்லீங்களே" என்று கண்ணுடியை நெற்றிக்கு தூக்கிவிட்டுக்கொண்டு தன் நாலு பற்களை வெளியே காட்டுவான். நாங்கள் தபாலுக்காக அல்லாவிடினும் அவன் சொல்லும்போது வைத்துக் கொள்ளும் முகத்தைப் பார்பதற்காகவே தினம் தபாலாபீஸுக்கு செல்வது வழக்கம். ஒவ்வொருவரும் "தாதய்யா தபாலுண்டா?" என்று கேட்பதும்; அவன் "இல்லீங்களே" என்று சொல்வதும் அவன் வாயமூலைப்பார்த்துசிரிப்பதும், இதனுல் ஆபீஸ் வேலைக்கு இடஞ்சல் ஏற்படவே இப்பொழுதெல்லாம்போஸ்ட் மாஸ்டர் கட்டுகளை எடுத்துக்கொண்டு வெளி திண்ணையில் உட்காரும்படி செய்துவிட்டார். அவனை எவ்வளவு கேலி செய்தாலும் கோபிப்பது என்பது தாதய்யாவிடம் கிடையாது!

காகம் தூக்கிக்கொண்டு வருவது போல் அவன் தலைமேலுள்ள பார்சல் மூட்டைகள் ஆட, அதை கீழே விழாமல் தடுக்க அவன் தலை ஆட, அதற்கு தகுந்தாற்போல் அவன் உடம்பாடும் அழகைப் பார்த்தால் அபினயத்துடன் நாட்டியமாடுவது போலிருக்கும். குழந்தைகள் அவனை சுற்றி நின்றுகொண்டிருக்கும். குழந்தைகள் கேட்கும் ஒவ்வொரு கேள்விக்கும் தாதய்யா அவர்களை திருப்தி படுத்தும் விதத்தில் பதில் சொல்வான்.

"தாதய்யா! எங்காத்துக்கு கடுதாசி இருக்கோ?" என்று கேட்கும் ஒரு குழந்தை.

"இந்தா பாப்பா! தாதான்னு சொல்லு. கடுதாசு அப்பா ஆபீஸுக்கு போய் எழுதிவா! நாளைக்கு தரேன்." என்பான்.

"எங்காத்துக்கூட இல்லை"?

"உங்காத்துக்கா! உன் பெயரென்ன? மணியா! இந்தா" என்று ஒரு வெற்று கடிதத்தை கொடுப்பான். குழந்தை திருப்தி அடைந்ததாக ஓடும்.

"தாதய்யா! தபாலுண்டா? என்று சற்று வயதுவந்த பெண் கேட்பாள்.

"கடுதாசா! நீ இன்னும் ஒத்தனையும் கட்டிக்கிலியே! அதுக்குள்ளே யார் அம்மா! உனக்கு போடுவாங்க." அதற்குள் நாணம் அவளை உள்ளிழுத்து செல்லும்.

'போஸ்ட்மேன் 'எனி லெட்டர்,'" என்று நவ நாகரீக நங்கை கேட்பாள்.

"ஸாரி மாடம்," என்று சொல்லும்போது அவன் முகம் போகும் போக்கை பார்க்க வேண்டுமே தவிர எழுதி தெரிந்துகொள்ள முடியாது.

"ஸார் தபால்," என்று கூப்பிடுவான். விழுந்தடித்துகொண்டு ஓடிவந்தால் உங்களுக்கல்ல சார்! குடியிருப்பவருக்கு தான், என்பான். உற்சாகம் குன்றி திரும்பு கையில், "உங்களுக்கு மணியார்டரொன்றிருக்கு" என்பான். கவலை முகம் கலைந்து சிரிப்பாக மாறும். மணியார்டர் பத்து ரூபாயென்றுல் ஒன்பது ரூபாய் நோட்டுகளாயும் ஒரு அரை ரூபாய், கால் ரூபாய் ஒன்று, இரண்டணுவில் இரண்டு தான் கொடுப்பான். கொடுத்துவிட்டு பல்லை காட்டிக்கொண்டு நிற்பான்.

"ஏன், தாதய்யா! நிற்கிறே," என்றுல், "மணியார்டர் சரியாக இருக்குதுங்களா? சில்லரை......" என்று எழுப்பதற்குள் இரண்டணு அவனை தேடி வரும். அதை வாங்கியவுடன் அவன் முகம் மாறும். அதைப் பார்த்து நாம் சிரித்துதான் ஆகவேண்டும்.

எனக்கு வரவேண்டிய கடிதம் ஒன்று ரொம்ப முக்கியமானது. அவசரமானது கூட. அன்று தாதய்யனை எதிர்பார்த்து எதிர் பார்த்து கண்கள் பூத்தன. ஒரு வழியாக ஒரு மணிக்கு வந்தான். நான் வாசலில் நின்றுகொண்டிருந்தேன். என் வீட்டைத் தாண்டி விட்டான். "தாதய்யா, ஏதா...... "இல்லீங்களே," என்று கைவிரித்தான். பக்கென்றது. நல்லா பாரப்பா." எம். எஸ். ஆர். தானுங்களே. ஹூம் இல்லை என்றவாறு போய்விட்டான. அடுத்த நாள்.

"சார்! லெட்டர்," என்றது தாதய்யாவின் குரல். கடிதத்தைக் கொடுத்துவிட்டு நின்றுகொண்டிருந்தான். கடிதத்தின் மேல் நேற்றய முத்திரை இருந்தது.

"தாதய்யா! இது என்ன?" என்றேன்.

"ஆமாங்க! தவறிடுச்சுங்க" என்று முகத்தை தொங்க போட்டவாறு சொன்னுன். அப்போது அவனைப்பார்ப்பவர் யாவரும் மனங்கசிந்து அவன் பரிதாப நிலைகண்டு மனமுருகுவர் அந்த கடிதம் மறுநாள் வந்தில் எனக்கு பதினைந்து ரூபாய் நஷ்டங் கூட. ஆனுலும் அவனை கோபிக்க முடிவதில்லை. அடுத்த சில தினங்கள் ஒழுங்காக இருக்கும். மறுபடியும், "இல்லீங்களே," பல்லவியை பாட ஆரம்பிப்பான்.

போஸ்டாபீஸில் மணியார்டர் குமாஸ்தா லீவு. போஸ்ட்மாஸ்டர் தாதய்யனை மணியார்டர்களை வாங்கும்படி சொன்னுர். மணியார்டர் பாரத்துடன் பத்து ரூபாய் நோட்டை கொண்டுபோனேன். மணியார்டருக்கு நாலணை ரூபாய் போக மீதி கொடுக்க யோசித்தான். "என்னப்பா யோசனை," என்றேன் நான். "இல்லீங்க! இன்னிக்கி சில்லரை கொடுத்தா நிதமில்லே சில்லரையில்லாமவருவீங்க" என்றவாறு சில்லரையை கொடுத்தான். அவனுடைய இச்செய்கையை கண்டு சிரிக்காமல் வேறென்ன செய்வது?

பறந்தன பல வருடங்கள். தாதய்யா 'ரிடையராக வேண்டிய காலம். புது போஸ்ட்மேன் வந்தாயிற்று. தாதய்யா அவனுக்கு வீடுகளை யெல்லாம் காண்பிக்கும் முறையாக வந்தான். ஒவ்வொரு வீட்டிலும் சென்று தான் வேலையை விட்டு போவதாக சொல்லி புது தபால்காரனை அறிமுகப்படுத்தி விட்டு சென்றுன்.

ஒவ்வொரு வீட்டிலிருந்து வரும்போதும் இரண்டு கண்களிலிருந்தும் நீர் துளிகள் துடர்ந்து சொட்டின.

என்னதான் தற்போதுள்ள புது தபால்காரன் ஒழுங்காக கடிதங்கள் கொடுத்தாலுங்கூட எங்கள் தாதய்யாவைப்போல வருமோ?

★

நாம் கூறுவது அநேகருக்குப் பிடிக்காமலிருக்கலாம். விவாதம் செய்யக்கூட நம்மிடம் தயாராக இருக்கலாம் என்பதும் நமக்குத் தெரியும். ஆனல் இது விவாதித்து முடிவுகட்டக்கூடிய விஷயமல்ல. இது, உணர்ந்து காரியம் செய்யவேண்டிய விஷயம். நம் நாட்டு சாஸ்திரம், சரித்திரம், வெளி நாட்டு சாஸ்திரம், சரித்திரம் முதலியவைகளைக் கற்றுணர்ந்த பண்டிதர்கள் வேண்டுமானல் நம்மைத் தர்க்கத்தில் தோற்கடித்துவிடலாம். ஆனல் நாம் வெளிப்படுத்திய உண்மையை எந்தப் பண்டிதராலும் மறுக்கமுடியாது.

நாம் தோற்றாலும் சரி, ஜெயித்தாலும் சரி. உண்மையில் சமூக நலனைப் பற்றிய விஷயங்களில் அதிகாரம் யார் கையில் இருக்கவேண்டும் என்பதைச் சிந்திக்கவேண்டிய சமயம் வந்துவிட்டது. இன்றுவரையிலும் ஜம்பம் அடித்துக்கொண்டிருந்தவர்கள் இருந்துவிட்டுப் போகட்டும். துர்க்கா பூஜைக்கு முன்னல் அஷ்டமி இருந்தால் என்ன, பின்னல் இருந்தால் என்ன? பூனையைக் கொன்ற பாவம் தீர என்ன பிராயச்சித்தம் செய்யவேண்டும்? தாசி வைத்திருக்கும் மகந்து சொர்க்கம் போவாரா, நரகம் போவாரா? போன்ற விஷயங்களை அவர்களே யோசித்து முடிவுசெய்துகொள்ளட்டும். இதைப்பற்றி நமக்கொன்றும் கவலையில்லை.

ஆனல் சமூகத்திற்கு எது நன்மை பயப்பது? எது தீமை பயப்பது? எதை அனுஷ்டித்தால் சமூகத்திற்கு நன்மை விளையும்? எந்த வழக்கத்தை மாற்றி அனுஷ்டித்தால் தேசத்திற்கு க்ஷேமமுண்டாகும்? அந்நிய தேசம் செல்வதால் சாதி போய்விடுமா? இதுபோன்ற விஷயங்களை அவர்களிடம் விடுவது தற்கொலைக்கு ஒப்பாகும்.

இவ்விஷயங்களெல்லாம் நன்கு கற்றறிந்து மனப்பக்குவம் பெற்றவர்கள்தான் ஆலோசிக்கவேண்டும். தேசத்தில் சகலரும் பெரியவர்கள் என்று சொல்லப்படுவோர்கள்தான் முடிவுகட்டவேண்டும். பிராமண பண்டிதர்களிடம் இந்த அதிகாரம் கிடையாது.

சாஸ்திரம் என்னத்திற்கு இருக்கிறது? எந்த சாஸ்திரம் உண்மை என்பதொன்றும் பிராமணப் பண்டிதனுக்குத் தெரியாது. அந்தக் காலத்தில் சமூகத்தில் என்னென்ன குணதோஷங்களிருந்தன; இப்போது என்னென்ன இருக்கின்றன? என்பது பண்டிதனுக்குத் தெரியாது. இவ்விஷயங்களை எல்லாம் பண்டிதர்களுக்கு எந்தப் பள்ளிக்கூடத்தில் சொல்லிக்கொடுத்தார்கள்? எந்த ஸ்மிருதியில் இந்தப்பிரகாரம் சிந்திக்கப்பட்டிருக்கிறது? தங்கள் இனத்தைத் தவிர மற்றவர்களெல்லாம்தான் மிலேச்சர்கள், அநாகரிகர்களாச்சே? தங்கள் இனத்தைத் தவிர மற்றவர்கள் எல்லாம் அதர்மிகளாயிற்றே! தங்கள் பழக்க வழக்கங்களைத் தவிர்த்து மற்றவர்களுடையது எல்லாம் ஈனமானதாயிற்றே! தங்கள் இனத்தாரைத் தவிர மற்றவர்களையெல்லாம் மனிதர்களாகவே கருதுவதில்லை. காலத்தோடு பழக்க வழக்கமும் மாறுகிறது என்பதை நம்புவதே இல்லை. ஆகையினல்தான் புதிதாக ஏதாவதொன்றை கையாளத் தொடங்கினதும் கூச்சல் போட ஆரம்பிக்கிறார்கள். சாஸ்திரத்தில் இதற்கு ஆதாரமே கிடையாதே என்று கதறுகிறார்கள். உடனே குறுக்கிட்டுத் தடுத்து தேசத்தையும் சாஸ்திரத்தையும் காப்பாற்றுகிறார்கள்.

முன் தொடர்ச்சி.

# பெண்ணின் பெருமை

சரத் சந்திர சட்டர்ஜி.



ஆனல் உண்மையிலேயே இவர்கள் சாஸ்திரத்தைக் கடைப்பிடிக்கிறார்களா? என்ற கேள்வி எழுகிறது. சாஸ்திரத்தில் ராக்ஷச விவாகமுமிருக்கிறது; சாஸ்திரத்தில் பைசாச விவாகமுமிருக்கிறது. சாஸ்திரம் மக்கட்பேறுக்காக பரபுருஷனைக் கூடலாமெனக் கூறுகிறது. தற்காலத்தில் இவைகளெல்லாம் அனுஷ்டானத்திற்கு வருவதை இவர்கள் நல்லதெனக் கூறிகிறார்களா? இவைகள் கெட்டதானல் என் கெட்டது என்பதற்காவது சரியான காரணம் கூறுவார்களா? சுற்றி வளைத்துக்கொண்டு ஏதேதோ சமாதானம் கூற முயலுவார்கள். 'இது தேசாச்சாரம்' அல்ல. இது உசிதமல்ல. மனிதனுடைய நியாயபுத்தி இதை ஒத்துக்கொள்ளாது' என்றெல்லாம் கூறுவார்கள். 'ஐயா, இது சாஸ்திரத்தில் இருக்கிறதே' என்றால், 'இருக்கட்டுமே!' என்பார்கள். இன்னொரு நூலில் இதற்கு மாறாகவும் சொல்லியிருக்கிறது என்பார்கள். நமது வீட்டில் காந்தர்வ விவாகமோ, பரபுருஷ சந்தான உற்பத்தியோ ஏற்பட்டால் வெறுப்பார்கள். வேறு யாராவது இக்காரியங்களைக் செய்தாலும் நாமும் இல்லாதது எல்லாம் பேசுவோம்.

உண்மை என்ன தெரியுமா? நாம் அதை விரும்பாததுதான். எந்த சாஸ்திரமாக இருந்தாலும் ஆணின் அபிப்பிராயத்திற்கு ஒத்துவராவிட்டால் அதிக நாள் நிலைத்திருக்கமுடியாது. ஆனல் ஆணின் அபிப்பிராயத்திற்கு ஒத்த சாஸ்திரமாயிருந்தால் உடனே நிலைத்துவிடும். கடவுளே வந்து மறுத்தாலும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் அந்த சாஸ்திரம் ஒருவருக்குத் துக்கத்தைக் கொடுப்பதாயிருக்கலாம். ஆனல் சாதாரண இச்சையை அமுக்குவதால் அந்த துக்கம் கெட்டதாகப் போய்விடாது. அது தர்ம வேடம் பூண்டு பரலோகத்தில் நூறுமடங்கு சுகம் கொடுப்பதாகச் சித்தரிக்கப்படுகிறது. ஆணின் துக்கம் என்னமோ கணநேரத்தில் மாறுவதாயிருக்கிறது. ஆனல் எப்போதும் துக்கம் அனுபவிப்பவள் பெண்தான்.

நமது தேசத்தில் பெண்களுக்கிருக்கும் தர்மக் கட்டளைகளை அறிவோம். அந்நிய நாடுகளிலும் இதேமாதிரிதான் கடைப்பிடித்துவந்திருக்கிறார்கள். சுமார் நான்கு, ஐந்து ஆயிரம் வருஷங்களுக்கு முன் லுப்த சாதியார்கள் அனுஷ்டித்த விதிகள்: "கணவனிடம் வெறுப்புக் கொண்ட மனைவி, 'நீ எனது கணவனல்ல' என்று சொல்லிவிட்டால் சனங்கள் அவளை ஆற்றில் தள்ளிவிடவேண்டும்." அடுத்தபடியாக என்ன கூறுகிறது தெரியுமா? "நீ எனது மனைவி அல்ல" என்று ஒரு கணவன் சொல்வானல் அவன் பாதி அளவு வெள்ளி கொடுத்து அவளை விலக்கிவிடலாம்."

எவ்வளவு சூட்சம நீதி பார்த்தீர்களா? அரை அளவு வெள்ளி எவ்வளவிருக்கும் என்பது நமக்குத் தெரியாது. ஆனல் நதியில் தள்ளி கொல்லும் உயிருக்குச் சமமானதாக இருக்குமென்று ஒப்புக்கொள்ளமுடியாது. சிறிது நாளைக்கு முன் ஐரோப்பியப் பெண்களைப்பற்றி அநேகர் பின்கண்டவாறு எழுதிவந்தார்கள். "தகப்பன்மூலம் கணவனுக்கு விற்கப்படுகிறாள். அவளுடைய சகோதரனுக்கும் இவளுக்கும் சட்ட உரிமைகள் மாறுபடுகின்றன."

இன்னும் சிலர் எழுதியதாவது: "உழைப்பாளிப் பெண் ஜமீன் சொத்துக்குச் சமம். சொல்லமுடியாதவாறு உழைக்கிறாள்."

ஆம். வெளிக்கு மிகவும் பகட்டாகத்தான் தெரிகிறது. ஆண், பெண்ணின் நலனைக் கோரியே இருந்தவனல்ல. இருப்பவனுமல்ல. மில், கன்டோர்சேட் போன்றவர்கள் இரக்கப்பட்டு பெண்ணைப்பற்றி இரண்டொரு புத்தகங்கள் எழுதிப்போயிருக்கிறார்கள். பண்டைக் காலத்தில் பிளாடோகூட 'ரிபப்ளிக்' என்று தாம் எழுதிய புத்தகத்தில் கூறுவதாவது: "சாமான்ய வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருக்கும் பெண்கள் உயர்ந்த காரியங்களுக்குத் தகுதி அற்றவர்களா? பெண்களுக்குத் துணிவு, புத்தி, மற்றக் கலைகளில் ஈடுபடத் தகுதி முதலியவை போதாதா? அவர்களிடம் இக்குணம் கொஞ்சம் குறைவானதாக இருக்கலாம். நம்மைவிடக் குறைந்த அளவில் இருக்கலாம். ஆனல் இதற்காக அவர்களை உபயோகமற்றவர்கள் என்று வைத்துவிடுவதா?"

நாம் இதை நன்கு யோசித்துப் பார்ப்பதில்லை. இதற்கு அருகதை அற்றவர்கள் என்று சொல்வதைப்போன்ற அநியாயம் வேறு ஒன்றும் இருக்கமுடியாது. ஆனலும் நாம் இவ்விஷயங்களில் எல்லாம் இவர்களிடம் ஒன்றும் பலன் கிடையாது என்று செப்லகிறோம்! இதற்கு முக்கியமான காரணம் என்னவென்றால் இது விஷயத்தில் நமக்கு உண்மையான சிரத்தை இல்லாததுதான்.

★

## தஞ்சையில் சங்கிதப் போட்டிகள்

தஞ்சை தியாகப்பிரும்ம சபையினரால் நடத்தப்பட்ட சங்கீதப் போட்டிகளில் மாகாணத்தின் பல பாகங்களிலிருந்தும் பலர் கலந்துகொண்டது குறிப்பிடத்தக்கதாகும். பால்ய வயதில் அபார ஆற்றல் பெற்ற கிட்டப்பா, தஞ்சை ராமஸ்வாமி இருவரும் சிறுவர் ஜூனியர் பகுதியிலும் அலமேலு, சுலோசனு, விசாலாக்ஷி மூவரும் பெண்கள் ஜூனியர் பகுதியிலும், அண்ணமலை நகரைச்சேர்ந்த திருமதி வேதவல்லி, திருச்சி சீதாமணிசேஷசாயி திருக்கோயிலூர் அலமேலு மூவரும் சீனியர் பெண்கள் பகுதியிலும் பரிசுகள் பெற்றனர். திருமதி வேதவல்லி, கிட்டப்பா இருவரும் ரோலிங்கப் வழங்கப்பட்டனர். வேதவல்லி, கிட்டப்பா மற்றும் சிலர் கச்சேரிகள் செய்தனர். சபைத் தலைவர் திரு. M. அனந்தநாராயணன் வீடுகளில் சங்கீதம் வரை வேண்டுமென்று கூறி பக்தி கலந்த சங்கீதத்தின் அவசியத்தைப் பற்றிப் பேசினர். பரிசுகளையும் வழங்கினர்.

## தஞ்சை இலக்கிய நண்பர் சங்கம்.

தஞ்சை இலக்கிய நண்பர் சங்கத்தார், சக்தி நாடக சபாவின் கவியின் கனவு நாடக ஆசிரியர் திரு சுந்தரம் அவர்களை சென்ற வாரம் வரவேற்று உபசரித்தார்கள். நாடகக்கலை, இலக்கியம் என்பன பற்றி ஆத்மநாதன், சிரோமணி முதலிய சிந்தனைச் செல்வர்கள் சொற்பொழிவாற்றினர்.

# காக்கையும் இலக்கியமும்

(சு. ராமச்சந்திரன்)



இத் தலைப்புச் சற்று வியப்பையே அளிக்கும். பறவைக் கூட்டங்களிலேயே தாழ்ந்தது காக்கை. நிறமும் கருப்பு. குரலோ கேட்க முடியாதது. உருவமும் பெரியது. புள்ளினங்களிலே நமக்கு மிக்கப் பிடித்தமானவைகள் கிளி குயில் மைனு முதலியவைகள்தான். என்? உருவத்தில் சிறியவைகள் அவைகள் அழகான நிறமுடையவை. பச்சை நிறமுடையது கிளி. நீலங்கலந்த கருப்பு வர்ணமுடையது குயில்; வெண்மை, கருப்பு, மஞ்சள் ஆகிய நிறங்கள்கொண்டது மைனு. சொல்லியதை அப்படியே திருப்பிச் சொல்லக் கூடியது கிளி. வேனிற் காலத்தில் மாந்தளிரைப் புசித்து இனிமையாகத் தேனொழுக்குப்போல பாட வல்லது குயில். மைனுவும் அழகாகப் பாடக்கூடியதுதான். காக்கை கரைந்தால் கர்ண கடூரமாக இருக்கிறது. மக்கள் யாவரும் காக்கையைப் பொருட்படுத்துவது இல்லை.

ஆனால் புலவர்கள் அங்ஙனம் காக்கையை அலக்ஷியம் செய்துவிடவில்லை. அதற்குத் தனிப்பட்ட மதிப்பையே அவர்கள் கொடுத்திருக்கிறார்கள். பிற்காலத்துப் புலவர் ஒருவர் கூட "காக்கை குருவி எங்கள் சாதி" என்று உறவு கொண்டாடுகிறார். அமுத சாகரர் என்ற புலவர் காக்கைக் குலத்தின் மீது பொறாமைப் பட்டிருப்பதுபோல "பனிமாலிமயப் பொருப்பகஞ் சேர்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிற மாகுமென்று இவ்வாறு உரைக்குமன்றோ இவ்விரு நிலமே" என்று காக்கையின் பெருமையை அழகாக எடுத்துக் கூறுகிறார் வள்ளுவர்.

தவிர, காக்கை அகத்திய முனிவரது கரகத்தைக் கவிழ்க்காவிடில் வான் பொய்ப்பினும் தான் பொய்க்காத காவிரியாற்றை தன்னிடத்தே ஓடப்பெறுமா சோழ நாடு?

அகப்பொருளிலக்கியங்களிலே காக்கை நல்ல பெருமையையே அடைந்திருக்கிறது. தலைவன் பிரிந்து சென்ற காலத்துக் கலங்கியிருக்கும் தலைமகளுக்குத் தலைவனது வருகையைக் கூறி ஆறுதலை அளிக்கின்றது காகம். அக்காகத்திற்குத் தலைவியர்கள் அளிக்கப் போவதாக கூறும் விருந்தினைக் கேட்டவளவிலேயே நமக்கும் நாக்கில் ஜலம் ஊறுகிறது. தலைவன் எப்போ வருவானே என்று ஏங்கியிருக்கும் தலைமகளுக்குக் காகம் வீட்டில் வந்து உட்காரக் கண்டவுடனேயே ஒரு தனி உற்சாகம் பிறந்துவிடுகிறது.

அன்புச் செய்தியைக் கொண்டு வரும் தபால்காரனை நாம் ஆவலோடு எதிர்பார்ப்பதில்லையா? அப்படியே அவன் அன்புச் செய்தியைக் கொண்டுவந்தால் இனும் கொடுப்பதில்லையா நாம்? அதுபோலவே பிரிந்து சென்ற தலைவனது வருகையைத் தெரிவிப்பன காகங்கள். தலைவனது பிரிவினால் வருந்தியிருக்கும் தலைவியர் எவ்வளவு ஆவலோடு இச்செய்தியை வரவேற்பார்கள்! அவைகளுக்கு நல்ல முறையில் விருந்தளிப்பதாக அவர்கள் சொல்லுவதும் பொருத்தமுடையதுதானே.

உதாரணமாக ஹிந்தி மொழியில் உள்ள செய்யுள் ஒன்றைப் பார்ப்போம்.

ஒரு தலைவியினுடைய கணவன் பிரிந்து சென்று வெகு நாட்கள் ஆகிவிட்டன. அவன் திரும்பி வருவதாகக் குறித்துச் சென்ற நாளும் குறுகிக் கொண்டே வருகிறது. அதற்குள் தலைவி தனது நாயகன் இப்பொழுதே வந்துவிட மாட்டானா என்று ஆத்திரப் படுகிறாள். யாராவது அவனது வருகைச் செய்தியைக் கொண்டுவர மாட்டார்களா என்று ஏங்குகிறாள். இந்தச் சமயத்தில் காகம் ஒன்று அங்கே வந்து உட்காருகிறது. அதைக் கண்ட தலைவி மிக்க உற்சாகம் கொண்டவளாகக் கூறுகிறாள்:—

"ஏ அன்புள்ள காகமே. எனது அன்பரது வருகையைத் தெரிவிப்பாயாக, நீ சொல்லியபடி என் தலைவர் வந்துவிட்டால் உனக்குப் பால் கலந்த சோற்றை உணவாக அளிப்பேன்."

எவ்வளவு அருமையான விருந்து, காக்கைக்குப் பால் கலந்த சோற்றையல்லவா உணவாக அளிக்கிறேன் என்று கூறுகிறாள், அத் தலைவியினுடைய மனத்தில் எத்தகைய நன்மதிப்பை அடைந்துவிட்டது அக்காகம்!

ஐங்குறுநூற்றிலுள்ள செய்யுளொன்றைப் பார்ப்போம்.

பெற்றோர்களுக்குத் தெரியாமல் நட்புக் கொண்டிருந்த காதலர்கள். அவர்களது உத்திரவு இல்லாமலேயே ஊரை விட்டு வேற்று நாடு சென்றுவிடுகிறார்கள். செவிலித்தாய் இதையறிந்து மிக்க வருந்துகிறாள். தன் மகள் சுகமாக இருக்கவேண்டும் எப்படியாவது திரும்பி வந்துவிட வேண்டும். அவள் காதலித்த மகனையே மணந்துகொள்ளட்டும். எப்படியாவது அவள் திரும்பி வந்தால் போதும் என்று ஏங்குகிறாள். அச்சமயத்தில் ஒரு காகம் வந்து உட்காருகிறது. சொல்லுகிறாள்.

மறுவில்தூவிச் சிறு கருங்காக்கை
அன்புடை மரபின் கிளை யோடாரப்
பச்சூன் பெய்த பைந் நிண வல்சி
பொலம்புனை கலத்தின் தருகுவன்
மாதோ.

வெஞ்சின விறல்வேற் காளையொடு
அஞ்சி லோதியை வரக் கரைந்தீமே

"குற்றமற்ற சிறகுகளையுடைய சிறிய கருங்காக்கையே. நீயும் உன்னைச்சேர்ந்த இனத்தவரும் சந்தோஷமாகப் புசிக்கும்படி நல்ல ஊனோடு கூடிய அழகிய மாமிசத்தைப் பொற்கலங்களிலே சாப்பிடும்படி தருவேன். நீ அதற்குப் பதிலாக என்ன செய்யவேண்டுமென்றால் என் அருமை மகள் தன் கணவனோடு வந்து சேரும்படி கரைய வேண்டும். அவ்வளவுதான்." என்பது பாடலின் கருத்து.

காகம் வாயைத் திறந்து கரைவதற்கு எத்தகைய அருமையான கைம்மாறு செய்வதாகக் கூறுகிறாள் செவிலித்தாய். ஊனோடு கூடிய அழகிய மாமிசத்தைப் பொற்கலத்திலே தருவதாகக் கூறுகிறாள். எத்தகைய அழகிய விருந்து. கரையும் காக்கைக்கு மாத்திரமல்லாமல் காக்கைக் குலத்திற்கெல்லாம் கூட விருந்தளிக்கிறேன் என்று கூறுகிறாள். அச் செவிலித்தாய் காக்கையினத்திற்கே சிறந்த மதிப்பைக் கொடுத்துவிட்டாள்.

ஒரு ஆழ்வாரது பாடலைப் பார்ப்போம்.

தன்னைத் தலைவியாகவும் திருமாலைத் தலைவனாகவும் பாவித்துப் பாடுகிறார்.

தலைவி தன்னுடைய தலைவன் எப்போ வருவானோ என்று அவனது வருகைக்கு ஏங்கியிருக்கிறாள். காகம் ஒன்று அங்கு வந்து உட்காருகிறது. சொல்லுகிறாள்,-

"கரையாய் காக்கைப் பிள்ளாய்
கருமாமுகில்போல் நிறத்தன்
உரையார்தொல் புகழ் உத்தமனைவரக்
கரையாய் காக்கைப் பிள்ளாய்."

காக்கை பிள்ளாய்: நீ சொல்லமாட்டாயா என்னுடைய தலைவனது வருகையை. அவனுடைய அடையாளமெல்லாம் சொல்லுகிறேன் கேள். அவன் கருத்த மேகம் போன்ற நிறமுடையவன். பலரும் புகழ்ந்து பாராட்டக் கூடியவன். அத்தகைய என்னுடைய கணவன் எப்பொழுது வருவான் என்று நீ தெரிவிக்கமாட்டாயா?

தன்னுடைய கணவனது அடையாளங்களைச் சொல்லி அவனது வருகையைத் தெரிவிக்கும்படி ஏக்கத்தோடு கேட்கும் தலைவியின் மனப்பான்மை இப்பாட்டில் மிகவும் அருமையாக விருக்கிறது.

தன்னைத் தலைவியாகப் பாவித்துப் பாடும் ஆழ்வாரது திருமால் விஷயமான பக்தியும் நன்கு புலப்படுகிறது.

பழமொழியாசிரியர் முன்றுறையரையனார்.

"கள்ளியகிலும் கருங்காக்கைச்
சொல்லும்போல் எள்ளற்க
யார் வாயின் நல்லுரையை." என்று கூறுகிறார்.

அகில் உயர்ந்த வாசனைத் திரவியம். அதன் பிறப்பிடமோ கள்ளி ஆனாலும் அதை யாவரும் வெறுப்பதில்லை. காக்கை பறவையினங்களிலேயே தாழ்மையானதுதான், ஆனாலும் அதன் சொல்லை யாரும் புறக்கணிப்பதில்லை. மிக்க மகிழ்வுடனேயே வரவேற்கிறார்கள். எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப் பொருள் காண்பதல்லவா அறிவு. எதையும் நாம் அற்பமானதென்று அலக்ஷியம் செய்துவிட முடியாது. அலர்கதிர் ஞாயிற்றைச் சிறிய கைக்குடையும் காத்துவிடுகிறதல்லவா?

இம்முறையில் காக்கை அற்பமானது என்றும் இழிவான பறவை என்றும் எண்ணுவதற்கில்லை. இலக்கியங்களிலே அது சிறந்த பெருமையையே அடைந்திருக்கிறது.



## உறையூர் ஸ்ரீ தியாகராஜ மியூசிக் மகாநாடு

மார்ச்சு 4-உ முதல் 8 முடிய ஷை சபையின் ஆதரவில் தியாகராஜ ஸ்வாமிகளின் 7-வது ஆண்டு ஆராதனை விழா சிறப்பாக நடைபெற்றது. பல பாடகர் பாடகிகளும், இளம் வித்வான்களும் சிறுமிகளும் பங்கெடுத்துக்கொண்டனர். 9-உ இரவு குளிக்கரை பிச்சையப்பா சகோதரர்களின் நாதஸ்வரக் கச்சேரியின் போது சபையின்சார்பாக தமது சொந்த செலவில் திரு. பாலசுந்தரம் செட்டியார். குளிக்கரை சகோதரர்களுக்கு ஒரு தங்க மெடல் வழங்கினர். விழாவின் முடிவில் பொது ஜனங்களின் வேண்டுகோளாக குலசேகரப்பட்டணம் கைதிகளுக்கு கருணை காட்டுமாறு வைஸ்ராய்க்குத் தந்தி மூலம் கேட்டுக்கொள்ளத் தீர்மானிக்கப்பட்டது.

அதிசயப் பிறவிகள் 1.

# நம்ப பரமசிவம்!

'கஜமுகன்'



[அதிசயப் பிறவிகள் என்றால் அவர்களுக்கு நாலு காலோ கையோ இருக்குமென்று நினைக்கவேண்டாம். உலகத்தில் விசித்திரமான மனப்பான்மையுடையவர்கள் அநேகர் இருக்கிறார்கள் அல்லவா? அவர்களில் சிலரை இந்தப் பகுதியில் அறிமுகப்படுத்தி வைக்கப்போகிறேன். இத்தலைப்பின் கீழ் வரும் நபர்களெல்லாம் வாழ்க்கை மரத்திலிருந்து பறித்த கற்பனை இலைகளே! உண்மைச் சம்பவங்களையொட்டியே இக் கற்பனை இலைகள் உதிரும். ஆனால் ஒருவரைக் கேலிசெய்யும் நோக்கத்துடனோ அல்லது விரோத மனப்பான்மைகொண்டோ எழுதப்படவில்லை என்பதை அழுத்தம் திருத்தமாகக் கூறிவிடுகிறேன்.]

உள்ளதைச் சொன்னால் உடம்பெரிச்சல். ஊரிலுள்ள நிலைமையை விவரித்தால் கோபம் வருவானேன்? முன்பின் அறிமுகமில்லாதவர் வீட்டில் ஸ்திரமாகத் தங்குவதென்றால் முடியும் காரியமா? அதுவும் தற்காலத்தில்? சாப்பிடுவதற்கு அரிசி கிடையாது. அடுப்பெரிக்கக் கரி கிடையாது. இந்த லட்சணத்தில் விருந்தாளியை வைத்து படைப்பதென்றால் முடியும் காரியமா? இதையெல்லாம் அந்த மனிதன் கொஞ்சம் உணர்ந்திருந்தானானால் அப்படிப் பேசியிருக்கமாட்டான்!

எல்லாம் நம்ப பரமசிவத்தைப் பற்றித்தான் சொல்கிறேன். நம்ப பரமசிவம் உறவு கொண்டாடுகிறேனே எனக்கு உறவினன் என்று எண்ணிவிட வேண்டாம் எனக்கும் அவனுக்கும் ஸ்நானப்பிராப்தி கூடக் கிடையாது. ஏதோ இரண்டு நாள் பழகினதோஷம்.

பரமசிவம் மதராஸிலிருந்து டில்லிக்கு மாற்றிக்கொண்டு வந்தார். ஏதோ வட இந்தியாவைப்பார்க்க வேண்டுமென்ற ஆசை. ஆசை இருப்பது சகஜம். அதைப்பூர்த்தி செய்வதற்குத் தகுந்த சாதனங்கள் இருக்கின்றனவா என்பதை முதலில் ஆராயவேண்டும். முக்கியமான சாதனம் சாப்பாடும், தங்குவதற்கு இடமும். சாப்பாடு கிடைக்கலாம் காசை விட்டெறிந்தால். இவ்வளவு பெரிய பட்டணத்தில் ஒருவனுக்கு இடமில்லாமல்போய் விடாது வாஸ்தவந்தான்! எவ்வளவோ ஹோட்டல்கள் இருக்கின்றன பார்த்துக்கொள்ளலாம் என்ற தைரியமிருந்தால் அவரை மெச்சலாம், ஆனால் அந்த தைரியம் அவருக்கு உண்டாகவில்லை. ஒரு நண்பரைக்கேட்டார். "எனப்பா, என்னை மாற்றி விட்டார்களே, அந்த ஊர் எனக்குப் புதிதாயிற்றே நான் எங்குபோய் தங்குவது? என்று அழாக்குறை யாகக் கேட்டதாக அவர் கூறினர்.

ஏதோ அதிர்ஷ்டவசமாய் அந்த நண்பருடைய சொந்தக்காரர் டில்லியில் இருந்தார். "நீ கவலைப் படாதே, நான் எழுதி உனக்கு ஏற்பாடு செய்யச் சொல்கிறேன்" என்று நண்பர் ஆறுதல்கூறினர். பரமசிவத்தின் முகம் மலர்ந்திருக்கத்தான் வேண்டும்.

நண்பரின் கடிதம் வந்து சேர்ந்தது. அதில் இன்னார் வருகிறார் ஏற்பாடு செய்யவும் என்று எழுதியிருந்தால்போதும். நண்பர் பரமசிவத்தின் பிரதாபங்கள் விவரிக்கப் பட்டிருந்தன. அவர் எங்கேயோ எல்லாம் நாடகமாடினாராம். மெட்ராஸில் ஏதேதோ சங்கங்களுக்கெல்லாம் காரியதரிசியாயிருந்தாராம். இவைகளெல்லாம் என்ன உத்தேசத்துடன் எழுதப்பட்டதோ தெரியவில்லை.

பரமசிவம் டில்லிக்கு மனைவி சகிதம் வந்துசேர்ந்தார். அன்று ஸ்டேஷனுக்கு ஒருவரும் போயிருக்காவிடில் பரமசிவம் பட்டிருக்கும்பாடு எனக்கல்லவோ தெரியும்?

பரமசிவம் வந்து இறங்கவேண்டிய வீடு மிகவும்சிறியது. கோடைகாலமாய் இருந்தால் ஒரு வீட்டில் பத்து பேர் வேண்டுமானாலும் இருந்துவிடலாம். அவர் வந்த சமயம் நல்ல குளிர்காலம். ஏற்கனவே வேலைக்காரன் உள்பட நான்குபேர் அந்த வீட்டில் இருந்தனர். அந்த வீட்டிலிருப்பது இரண்டு அறைகள். அதில் ஒன்று பரமசிவத்திற்கு ஒழித்துவிடப்பட்டது.

அவர் இரண்டு மூன்று நாட்கள் தான் இருப்பார் கஷ்டமாயிருந்தாலும் பொறுத்துக்கொண்டுவிடலாமென்றுதான் வீட்டுக்காரர் எண்ணினர். ஆனால் பரமசிவத்தின் பூர்வீகமான எண்ணம் வேறு விதமாய் இருந்தது. அதுதான் அந்த வீட்டிலேயே ஸ்திரமாகத் தங்கிவிடலாமென்று. மற்ற காலமாய் இருந்தால் தொலைந்துபோகிறது இருந்துவிட்டுப் போகட்டும் எனலாம.

அநுதினம் கரிக்கடைக்குப் பத்துத்தடவை போய் அப்பா அம்மா என்று கெஞ்சி 5 சேர் கரி வாங்கிக்கொண்டு வந்தகாலம் அது. கரி இல்லாவிடில் சோறு இல்லை.

வீட்டுக்காரர் அவர் வந்தவுடனேயே இங்கிருக்கும் நிலைமையைக் கூறினர். பரமசிவம் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டார். "எப்படியாவது 'மேக்கப்' பண்ணிக்கலாம் ஸார்!" என்றார் நடுநடுவில்.

என்னத்தை மேக்கப்பண்றதோ தெரியவில்லை. டிராமாவில் நடித்த நடிகரல்லவா? அதனால் இதையும் 'க்ரீன் ரூம்' என்று நினைத்துவிட்டார்போலும்!

ஐந்து நாட்கள் இருந்தார். ஆறும் நாள் ஏதோ சௌகரியமாய் இடம் கிடைத்தது, போய்விட்டார். அவர் பேசாமல் இருந்திருந்தால் திருப்தியுடன் இருந்திருக்கும். அதுதான் இல்லை.

முதலில் தங்கியிருந்த வீட்டிலுள்ளவர் ஒருவர் அவரைப் பார்க்கப்போனர். அவரிடம் ஆரம்பித்துவிட்டாரய்யா!

"நீங்கள் எல்லாம் ஒரு ஊருக்குப் போகமாட்டீர்களா? உங்கள் மனுஷர்கள் வந்தால் விட்டுவிடுவீர்களா? ஒரு நாலு நாள் உங்கள் வீட்டில் இருப்பதற்குள் எத்தனை தடவை அய்யா கரி கிடைக்காது, அரிசி கிடைக்காது என்று சொல்லிவிட்டீர்கள்? அங்கு நாலு நாள் சாப்பிட்டாலும் எதையோ சாப்பிடுவதுமாதிரித்தானய்யா சாப்பிட்டேன்! ஒரு மனுஷனுடன் பழகத் தெரியவில்லை அய்யா அவருக்கு. (வீட்டுக்காரருக்கு) நான் வந்திருக்கிறேன் இவர் பாட்டிற்கு ஆபீஸுக்குப் போகிறாரே! 'நான் உங்களுக்கெல்லாம் கஷ்டமாய் வந்திருக்கிறேன்' என்றேன். அவர் அதற்குப் பேசாமல் இருந்தாரே. அப்படியென்றால் என்ன அர்த்தம்? என் பெண்டாட்டி ஒரு அட்வகேட் பெண். அவளெதிரில என்னைச் சிறுமைப்படுத்தி விட்டாரய்யா! அதை நினைத்து நினைத்து அன்று இரவெல்லாம் அவள் அழுதாளய்யா! எப்போதுமே நிலைமை இப்படி இருந்துவிடப்போகிறதா? ஏதோ தனியாகப் போகிறேனே, ஊருக்குப் புதியவனாயிற்றே! ஏதாவது வேண்டுமா என்று கேட்டாரா? வைத்துக்கொள்ள இஷ்டமில்லையானால் தந்தி அடித்திருந்தால் நான் வேறுஇடத்தில்போய்த் தங்கியிருப்பேனே!" என்று பெரிதாக லெச்சர் பண்ண ஆரம்பித்து விட்டார்.

மனிதனுக்கு எவ்வளவு நன்றி கெட்டதனம் பாருங்கள்! ஏதோ புதிதாய் வந்த இடத்தில் இரண்டு நாள் தங்க இடம் கொடுத்தானே என்று கொஞ்சமாவது சிந்தித்துப் பார்த்தாரா? நாவில் நரம்பில்லாமல் இப்படியா வார்த்தைகளைச் சிதறவிடுகிறது? நான்கு நாட்களும் வேலைக்காரன் சமைத்துப்போட்டதை நன்னயிருக்கு நன்னயிருக்கென்று சாப்பிட்டுவிட்டுஅதையோ சாப்பிட்டமாதிரி சாப்பிட்டாராம்! ஏதோ போகட்டும் இப்பொழுதாவது பரமசிவம் சிறுமைப் படாமல் சௌக்கியமாய் இருப்பாரென்று நம்புகிறேன்!

---

# தென்றல்

"தமிழ் ஒளி"



**(1) தென்றல் உதவி:**

தென்றலே புழுக்கத் தாலே
திணறிநா னிருந்த போது
வன்றமிழ் மலரில் தோயும்
மணத்தினை அள்ளி வந்தே
என்றனைத் தழுவி யின்பம்
ஈந்தனை ; என்னு டற்கண்
ஒன்றியே யிருந்த வெம்மை
தன்னைநீ ஓட்டி விட்டாய்!

**(2) தென்றலின் நடப்பு:**

மலையினை விட்டி றங்கி
மடுவினிற் பாய்ந்து, வாழைக்
குலையினில் மோதி, தென்னைக்
கூரையில் நடந்து சென்றே
இலையினில் படிந்து, சோற்றை
இனியதாய்ச் செய்து, தாயின்
முலையினில் குளிர்ச்சி யூட்டிக்,
குழந்தையின் முகத்தில்
சேர்ந்தாய்!

**(3) தென்றலின் சிறப்பு:**

எழில்அணு அனைத்தை யும்நீ
இயக்குவாய்!; இயங்கிலாயேல்
'எழிலி' யும் 'நீர்மை' குன்றும்
என்னில், உன்பெருமை
என்னே!

தொழில்துறை தோறு முன்னைத்
தொட்டனர் ஏழை மக்கள்
புழுங்கிய அவரின் நெஞ்சம்
புகுந்துநீ குளிர்ச்சி செய்தாய்!

**(4) தமிழ் விருந்து:**

மாலையை நீம ணந்தாய்!
மணத்தினி லேவி ளைந்தாய்!
சோலையை நாடி வந்தோர்
இன்புறும் சுவைவி ளைத்தாய்!
காலைதோட் டுழைப்பி னாலே
களைத்தவர் உனைஅ ணைந்தார்!
சாலையில் நீஅ ளித்த
இன்பமோ தமிழ்வி ருந்து?

**(5) தென்றலின் இன்பம்:**

புன்னையில் சின்ன சிட்டுப்
புதுமொழி பேசிப் 'பெண்ணை'
'என்னடீ?' என்னுந் தென்றல்
எடுத்தடி வைத்த தாலே!
சின்னப்பெண் ணுரைத்தி ஈந்தச்
செவ்விதழ்ச் சுவையின்
முத்த(ம்)
அன்னதோ ரின்பம், வையம்
அடைந்தது தென்ற லாலே!

# சிவாஜி

அறவலி காத்து நாளும் அன்னையின் பணிக்கேன்றே நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினேம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி. தாரண-ஹு பங்குனி-மீ 5-உ. 18—3—45


# மற்றுமோர் மகாயுத்தம்?

இந்த யுத்தம் நம்மை படாத பாடு படுத்திவிட்டது. இன்னும் கஷ்டப்பட்டுக்கொண்டுதான் இருக்கிறோம். 1944ம்வருஷத்திலேயே முடிந்துவிடுமென்று சர்ச்சில்துரை சொன்னூர். பொய்யாகப்போய் விட்டது. எத்தனையோ ஜோஸியர்கள் கண்டபடி உளறினூர்கள். ஒன்றும் பலிக்கவில்லை. 1945 ம் வருஷமும் வந்து மூன்று மாதங்கள் ஆகின்றன. இன்னும் யுத்தம் முடிகிற காலத்தை குறிப்பிட முடியவில்லை.

நிலைமை இப்படி இருக்கும்போது அமெரிக்காவிலுள்ள ஒரு பிரமுகர் 'மற்றொரு யுத்தம் நிச்சயம்' என்று எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்க்கிற மாதிரி பேசியிருக்கிறூர். அமெரிக்க சோஷியலிஸ்ட் தலைவர் நார்மன்தாமஸ் என்பவர் தான் மூன்ருவது யுத்தத்தைப்பற்றி எச்சரிப்பவர். இவர் அமெரிக்க ஜனதிபதி ஸ்தானத்திற்கு பல தடவை போட்டி போட்டவர். எதிர்கால சம்பவங்களை முன்னதாகக் கூறுவதில் கொஞ்சம் கெட்டிக்காரரும்கூட.

அமெரிக்காவின் போக்கு நமக்கெல்லாம் ரொம்ப பிடித்திருக்கிறது. ஆனால் தாமஸுக்கு அதன் போக்கு பிடிக்கவேஇல்லை. அவர் குறைகூறும் காரணங்கள் பின் வருமாறு;

ஜப்பானை அழிப்பதற்கு அமெரிக்கா ஆசைப்படுகிறது. இதற்கு முக்கிய காரணம் வருண ஆதிக்க உணர்ச்சியே. ஆங்கிலம் பேசும் வெள்ளையர் ஆதிக்கத்தை நிலைநாட்ட வேண்டுமென்பதே அவ்வுணர்ச்சியின் நோக்கம். இவ்விதம் வெள்ளையரின் ஆதிக்கத்தை நிலைநாட்ட அமெரிக்கர் விரும்புகிறூர்கள். இதனுல் ஆசியாவில் மூன்ருவது உலக யுத்தம் என்ற பேராபத்து ஏற்படப்போகிறது. ஆசியா மக்களின் அபிலாஷைகளை திருப்தி செய்யவேண்டும். இல்லாவிட்டால் அடுத்த தலைமுறையில் ஆசியாவில் புரட்சிகள் தொடர்ச்சியாக ஏற்படலாம்.

இப்படி ஒரு அமெரிக்கர் எச்சரிக்கை செய்வதை அடியோடு அலட்சியம் செய்வதற்கில்லை. மற்றொரு யுத்தத்தை யாரும் விரும்பவில்லை. இந்த யுத்தமே உலகத்தை சலிக்கவைத்துவிட்டது. யுத்தம் வேண்டாம் என்ற எண்ணத்துடன் இருந்தால் மட்டும் போதுமா? அது ஏற்படுவதற்கு இருந்துவரும் காரணங்களை அடியோடு ஒழிக்கவேண்டாமா?

அமெரிக்கா ஒரு புது உலகை சிருஷ்டிப்பதில் ரொம்ப ஜாக்கிறதையாக நடந்துவருகிறது. இந்த யுத்தத்தால் ஏற்பட்ட அனுபவங்களைக்கொண்டு எத்தனையோ நீதியற்ற காரியங்களை நிவர்த்தி செய்துள்ளது. ஜனுதிபதி ரூஸ்வெல்ட் உலக மக்கள் எல்லோரும் ஒரு குடும்பத்தினரைப்போல் வாழவேண்டுமென்ற அடிப்படையில் எதையும் செய்ய சித்தமாயிருக்கிறூர். தைரியமாக செய்துகொண்டும் வருகிறூர்.

என்ருலும் அவரையும் குறைகூற இடமிருக்கத்தான் செய்கிறது. இன்றுள்ள உலகத்தலைவர்கள் புது உலக சிருஷ்டியில் நல்ல பெயர்வாங்க ரொம்ப கஷ்டப்படவேண்டியிருக்கும் என்பதையே இது எடுத்துக்காட்டுகிறது.

ரூஸ்வெல்டின் கொள்கையே குறைவாகப் பேசப்படும்போது, நமது பிரிட்டிஷ் "எஜமானர்களின்" போக்கு எந்த திராசில் நிறுத்தப்படுமோ யார்கண்டார்கள்!

ஆனுல் ஒன்றுமட்டும் நிச்சயமாகச் சொல்லலாம். புது உலகம் ஒரு நாட்டு மக்களை இன்னொரு நாட்டுமக்கள் ஆட்சி புரியவோ ஆதிக்கம் செலுத்தவோ விரும்பாது. ஒரு நாட்டினரை மற்றொரு நாட்டினர் நிறத்தின் காரணமாக குறைவாகப் பேச சகித்துக் கொண்டிருக்காது. ஒரு தேசத்தை இன்னொரு தேசம் சுரண்ட விட்டுக்கொண்டிருக்காது.

எல்லா தேசமக்களும் சரிசமமானவர்கள்; அவரவர்கள் தங்கள் தேசத்தை ஆளப்பிறந்தவர்கள் என்ற நிலையை இன்றுள்ள உலக பெரியார்கள் ஏற்படுத்தத் தவறுவார்களானுல் பேராபத்து இருந்தேவரும் என்பதைத்தான் நார்மன்தாமஸ் எச்சரிக்கிறூர்.

ஜனநாயக முறையை ஸ்தாபிக்கவே இன்றைய யுத்தம் நடக்கிறதாக சொல்லுகிறூர்கள். இது பேச்சளவில்தான் இன்னும் இருந்து வருகிறது. ஆனுல் காரியாம்சத்தில் ஏகாதிபத்திய மோகம் யாருக்கும் இன்னும் நீங்கியதாகத் தெரியவில்லை.

படிப்பது ராமாயணம் இடிப்பது பெருமாள்கோயில் என்ற வழக்கத்தை இனி கையாளாமலிருக்க வேண்டுமென்றே தாமஸ் எச்சரிக்கை அறிவுறுத்துகிறது. புது உலக சிருஷ்டி கர்த்தாக்கள் இதை எப்படி அலட்சியம் செய்ய முடியும்!

---




ஐரோப்பாவில் நடக்கும் யுத்தம் கடைசி கட்டத்தையடைந்துள்ளது. ரைன் நதியை நேசத் துருப்புகள் கடந்தது ஒரு பெரிய வெற்றி என்றே சொல்லவேண்டும். வரும் வாரங்களில் அதிசயமான சம்பவங்கள் நிகழுமென எதிர்பார்க்கலாம்

ஜெர்மானியருக்கு இருந்த கடைசி எதிர் தாக்குதல் வசதிகள் எல்லாம் அழிக்கப்பட்டன. திக்கு முக்கலாடிக்கொண்டிருக்கும் இப்போதைய ஜெர்மனி அனேகமாக யுத்த நிறுத்தம்செய்ய விரும்பக் கூடும்.

கீழ் திசையில் செஞ்சேனை சகல ஜெர்மன் தற்காப்புகளையும் ஹதம் செய்துகொண்டு பால்டிக் கரைகள் வரை வந்துவிட்டன. மேற்கே நேசத் துருப்புகளும் கிழக்கே செஞ்சேனையும்அடைந்து வரும் முன்னேற்றம் சிலதினங்களுக்குள் ஜெர்மன் தலை நகரைச் சுற்றி வளைத்துவிடும் நிலையை சிருஷ்டிக்கக் கூடும்.

சென்ற வாரத்தில் இரண்டு முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்தன. ஒன்று ஜெர்மானியர் பிரமாதமாகச் சொல்லிக் கொண்டிருந்த சீக்பிரிட்அரண்கள் தவிடு பொடியானது. மற்றொன்று ரைன் நதியைக்கடந்து பாலமுகப்பு விஸ்தரிக்கப்பட்டது

இதனுல் ஜெர்மானியர் வெகு முக்கியமான தொழில் பிரதேசங்களை இழந்துவிட்டனர்.

ரைன்லாந்தில் நடந்த சண்டையில் 24 ஜெர்மன் டிவிஷன்கள் அழிக்கப்பட்டன அல்லது நிச்சயமாக அழிக்கப்படும் நிலைமையில் இருக்கின்றன. ஆயினும் நேசத் துருப்புகள் வேகமாக நடவடிக்கை எடுத்து இப்போது சற்று சிதைந்துள்ள ஜெர்மனியரை சேரவிடாமல் செய்தால் இன்னும் சில முக்கிய வெற்றிகள் பெறக்கூடும்.

தென் கிழக்கு. வட கிழக்கு, கிழக்கு பகுதிகளிலிருந்து இன்னும் சில தினங்களில் பெர்லின் மீது இறுதித் தாக்குதல் ஆரம்பமாகக்கூடும்.

ஜெர்மானியருக்கு ஏற்பட்டிருக்கும் அந்தியகால நெருக்கடி பல ஹேஷ்யங்களுக்கு இடமளித்து வருகிறது. அவைகளில் ஒன்று ரகசிய ஆயுதம்பற்றியது. படுநாசம் விளைவிக்கும் புதிய ரகசிய ஆயுதம்பற்றி ஜெர்மானியர் தினசரி மிரட்டி வருகிறூர்கள். ஆனுல் அவ்விதம் மிரட்டலை லண்டனில் அலட்சியம் செய்யப்படவில்லை.

விஷ வாயு பிரயோகத்திற்காக ஜெர்மானியர் விரிவாக முன்னேற்பாடுகள் செய்வதாக நடுநிலைமை நாடுகளிலிருந்து தகவல் கிடைப்பதாக சில செய்திகள் கூறுகின்றன.

ஒரே மாதத்திற்குள் லண்டன் மீது கடைசி தடவையாக வஞ்சம் தீர்க்க ஹிட்லர் முயலலாமென்று கருதப்படுகிறது.

பர்மாவிலும் நேசப்படைகளின் போர்முறை வெற்றிபெறச்செய்து வருகிறது. நேசப் படைகள் மாண்டலேயில் போரிடுகின்றன. லாஷியோ பிடிபட்டு விட்டது. இன்னும் சில தினங்களில் மாண்டலேயும் நேசத் துருப்புகள் வசமாகிவிடலாம். மாண்டலே வீழ்ந்தால் பழைய பர்மா ரோடு வழியாக சீனுவுக்கு சப்ளைகள்போவது சாத்தியமாகிவிடும்.

அதன்பிறகு ரங்கூனைக் கைப்பற்றுவதும், பர்மா பூராவிலிருந்து ஜப்பானியரை விரட்டுவதுமே நேசத் துருப்புகளின் குறி.

மேற்கே நேசப் படைகளால் ஆபத்து அதிகரிக்கிறது. கிழக்கே அமெரிக்கரின் தாக்குதல் தாங்க முடியாமலிருந்து வருகிறது. இந்த சமயத்தில் இடையேயுள்ள சையாம், இந்தோ சீன முதலிய இடங்களில் ஜப்பானியர் சுறுசுறுப்பாக இருந்து வருகிறூர்களாம்.

பர்மா பூராவையும் நேசப்படைகள் மீட்டால் மலேயா, டச்சு கிழக்கிந்திய தீவுகளுடன் தரை மார்க்கமாக தொடர்பு வைத்துக் கொள்ள ஜப்பானியருக் குள்ள சந்தர்ப்பம் போய்விடும்.

ஜப்பான்மீது நடக்கும் பலத்த விமானத் தாக்குதல் இன்னும் ஓயவில்லை. ஜப்பான்மீதே அமெரிக்கர் படையெடுக்கக்கூடும் என ஜப்பானிய மந்திரி ?தம் தேச மக்களை எச்சரிக்கிறூர்.

சீனுவில் உள்ள இலக்குகளிலிருந்து ஜப்பான்மீது தாக்குதல் நடக்கும் என்று சொல்லப்படுகிறது. கீழ் கோடியில் இனி பரபரப்பான நிகழ்ச்சிகளை எதிர்பார்க்கலாம். ஜப்பான்மீது பெரிய தாக்குகளை நடத்த சீனுவும் முஸ்தீபு செய்துவருகிறது.

# என் அண்ணா

சத்ய-ராம்

என் அண்ணா என்னைப் பார்க்க வருவதாக கடிதம் எழுதியிருந்தான். நான் அவனைப் பார்த்து பல வருஷங்கள் ஆயின. எங்களுக்குள் கடிதப்போக்கோ சந்திப்போ இல்லாமல் இருந்தாலும் பிரியம் குறையவில்லை. இதுவரை முன்னேற்பாடாக நாங்கள் சந்தித்ததில்லை. மூன்று வருஷங்களுக்குமுன் எதிர்பாராத விதமாக அவன் சிநேகிதர் ஒருவருடைய கல்யாணத்தை சாக்காக வைத்துக்கொண்டு என்னை வந்து பார்த்து விட்டுப் போனான். இப்பொழுதுதான் சிலநாள் லீவ் எடுத்துக்கொண்டு என்னுடன் தங்குவதாக எழுதியிருக்கிறான்.

என் தகப்பனார் காலம் சென்று பல வருஷங்கள் ஆயின. ஆனால் அதற்கு முன்னாலேயே என் அண்ணாவின் தகப்பனார் காலமானார். ஆம். அவன் என் சொந்த அண்ணா இல்லை. என் தகப்பனாரின் தம்பியின் பையன். ஆனால் அவன் என் சித்தப்பாவிற்குப்பிறகு என் தகப்பனாரின் ஆதரவில் வளர்ந்துவந்தான். எனக்கு விஜயலக்ஷ்மி என்று ஒரே ஒரு மூத்த சகோதரி. அவள் சிறு வயதில் நல்ல புத்திசாலியாகப் படித்து என் தகப்பனார் இருக்கும்பொழுதே நல்ல தேர்தல் அடைந்து தாய்தந்தையர்களுக்கு சந்தோஷத்தைக் கொடுத்த பாக்கியம் பெற்றவள். அவளுக்கு 12 வயதும் எனக்கு 6 வயதும் ஆக இருக்கும்போதே என் தகப்பனார் காலமானார். என் தகப்பனாருடைய பந்துக்களில் அந்த சமயத்தில் என்ன காரணத்தினாலோ ஒருவரும் எங்களை ஆதரவாக வைத்துக்கொள்ள முன்வரவில்லை. என் தாதா, தாயாருடைய தகப்பனார் மிகவும் தாராள குணமுடையவர். ஒருவர் கஷ்டப்படுவதைப் பார்த்து சகிக்கமாட்டார். என் தகப்பனார் இறந்த உடனேயே எங்களை அவருடன் அழைத்துச் சென்றுவிட்டார். ஆனால் என் அண்ணா பாவம். அவனுக்கு அந்த மாதிரி ஆதரவுள்ள மனிதர்கள் இல்லை. அவன் பிறந்ததுமே அவன் தாய் இறந்தாள். யாரோ ஒருவர் அவன் தாயின் சிறிய தகப்பனாராம். பெரிய மனிதர். ராவ் பஹதூர் முதலிய மரியாதைகளை உடையவர். ஆனால் என் அண்ணா அழைக்கப்படாமல் ஒரு இடத்திற்கும் போகமாட்டான். அவனுக்கு அப்பொழுது 16 வயது. காலேஜில் சேர்ந்து ஒரு வருஷம் ஆயிருந்தது. உடனே காலேஜை விட்டுவிட்டு அவனுக்குத் தெரிந்த ஒரு இடத்தில் 30 ரூபாய் சம்பளத்தில் அமர்ந்துவிட்டான், என் தாதாவும் அவன் பிழைத்துக்கொள்வான் என்று விட்டுவிட்டு வந்துவிட்டார். பிறகு நாங்கள் அவனை எப்பொழுதாவது இரண்டு வருஷத்திற்கு ஒருமுறைதான் சந்திப்பது. அவனை நான் நன்றாக தெரிந்துகொண்டது 3 வருஷங்களுக்கு முன்தான். அப்பொழுது எனக்கு பதினைந்து வயது. பின் வாழ்க்கையைப் பற்றி யோசனை செய்யவேண்டிய நிலையில் இருந்தேன். அதுவரை என் தாதாவின் தயவில் பள்ளிக்கூடப் படிப்பை கௌரவமாகக் கடந்து காலேஜில் சேரலாம் என்றிருந்தேன். ஆனால் பண விஷயமாக தாதாவிற்கு பெரிய நெருக்கடிபோல் எனக்குத் தோன்றிற்று. போதாதற்கு அவருடைய மற்ற பெண்களும் பிள்ளைகளும் எங்கள்மேல் அவர் வைத்திருக்கும் தனி அன்பைப்பற்றி பொறாமைப்பட்டார்கள். அடிக்கடி எங்களிடம் சொல்வதுண்டு: "நீங்கள் காலெடுத்து வைத்த நேரம், இங்கேயும் தரித்திரம் தாண்டவமாடுகிறது. எங்கள் அப்பா சம்பாதித்ததெல்லாம் உங்களுக்குத்தான் கொட்டித் தள்ளுகிறார், என்ன பலனைக் கண்டாரோ?" என்று. தகப்பனார் இறந்து 4 வருஷங்களுக்கெல்லாம் தாயாரும் இறந்துவிட்டாள். எனக்கு ஒரு பெரியம்மாள் உண்டு. மிகவும் சாது. அடிக்கடி என்னை லீவுக்கு அழைத்து ஐந்து பத்து ரூபாய் சிலவுக்கும் தருவாள். அவள் ஒருவள் தான் எங்களை சினிமாவுக்கும் கூட்டிக்கொண்டு போவாள். என் அக்கா, விஜயத்திற்கு என் தாயார் இருக்கும்போதே நல்ல இடத்தில் கல்யாணமாயிற்று. என் தகப்பனார் வைத்துவிட்டுப்போன ஒரு ஆயிர ரூபாயை எடுத்துக் கல்யாணம் நன்றாக முடிந்தது. என் பெரியம்மாளும் 200 ரூபாய் கொடுத்தாள். இப்பொழுது என் அக்காள் சென்னையில் அத்திம்பேருடன் இருக்கிறாள். அவளுக்கு 3 வயதில் ஒரு பிள்ளை. அத்திம்பேருக்கு அங்கே ஒரு பாங்கில் அறுபது ரூபாய் சம்பளம். ஏதோ அவரால் குடும்பத்தை சரிவர நடத்த முடிகிறது. அவருடைய தாயாரும்கூட வீட்டில் இருக்கிறாள்.

ஆதலால் அவளிடமிருந்து பண உதவி எதிர்பார்க்க முடியாதென்று எனக்கு தோன்றிற்று. இந்நிலையில்தான் போன தடவை என் அண்ணாவை நான் பார்த்தது. அவன் மேலும் படித்தால் நல்லது என்று உபதேசித்தான். அவனால் மாதம் பதினைந்து ரூபாய் அனுப்பமுடியுமென்றும் சொன்னான். ஆனால் அதை மாத்திரம் வைத்துக்கொண்டு என்ன செய்வது? சந்தர்ப்பங்களை உத்தேசித்து யோசனை செய்து தனக்கு கடிதம் போடும்படி என் அண்ணா சொல்லிவிட்டு ஊருக்கு திரும்பிபோய்விட்டான். அதன்பின் ஒரு மாதத்தில் என் தாதாவும் இறந்தார். உடனே எனக்கும் அவ்வீட்டில் இடமில்லை என்று தெரிந்துகொண்டேன். என் அத்திம்பேருக்கும் அண்ணாவுக்கும் கடிதம் எழுதி எனக்கு எங்காவது ஒரு உத்தியோகம் பார்க்கச் சொன்னேன். அதிருஷ்டவசமாக நான் இருந்த ஊரிலேயே ஒரு பாங்கில் எனக்கு முப்பது ரூபாய் சம்பளத்தில் உத்தியோகம் கிடைத்தது. என்கூட படித்த சிநேகிதர்களில் ஒருவனுடைய தகப்பனார் எனக்கு சிபார்சு செய்து சம்பாதித்துக் கொடுத்தார். எனக்கு சமைத்துப்போட என் பாட்டி (தாயின் தாயார்) துணையாக வீட்டில் இருந்தாள். நான் ஒரு தனி இடத்தில் சுயமாக குடித்தனம் செய்ய ஆரம்பித்தேன். அடிக்கடி என் அண்ணாவைப் பார்க்க வேண்டும்), லீவ் எடுத்துக்கொண்டு போகவேண்டும் என்று முயற்சி செய்தேன். இந்த இரண்டு வருஷமாக அது சாத்தியப்படவில்லை. தற்செயலாக அவனே வருவதாக கடிதம் வந்ததும் மிகவும் சந்தோஷப்பட்டேன். என் தகப்பனாருக்குப் பிறகு மிகவும் தள்ளாடிப்போன எங்கள் குடும்பம் இப்பொழுதுதான் நல்ல ஸ்திதிக்கு வந்திருக்கிறது. இப்பொழுதுதான் சந்தோஷமாக ஒருவரை ஒருவர் பார்க்கிறோம், என்ற குதூகலத்துடன் அவனை எதிர்பார்த்துக்கொண்டு காலை எழு மணிக்கே ஸ்டேஷனில் காத்துக்கொண்டிருந்தேன்.

என்ன காரணமாகவோ அன்று வண்டி 88 நிமிஷங்கள் நேரமாகவரும் என்று ஸ்டேஷனில் அறிவித்தார்கள். நான் சிறிது நேரம் உலாத்திக்கொண்டும் இரண்டு மூன்றுதரம் காபி குடித்துக்கொண்டும் பொழுது போக்கினேன். அதற்குள் தினசரி பத்திரிகைகள் வந்துவிட்டன. எல்லோரும் காத்துக்கொண்டிருக்கும் சமயத்தில் பத்திரிகைகளை வாங்கிப் படித்துக்தொண்டு இருந்தார்கள், எனக்கு தினமும் ஆபீஸில் படிக்க பத்திரிகை கிடைப்பதால், அனாவசியமாக காசை சிலவழிப்பானேன் என்று வாங்கவில்லை. ஒரு பெஞ்சியில் ஓரமாக உட்கார்ந்தேன். பக்கத்தில் ஒருவர் பத்திரிகையைப் படித்துக்கொண்டிருந்தார். மற்றொரு பக்கத்தில் இரு வாலிபர்கள் ஒரு பத்திரிகையை வைத்துக்கொண்டு சத்தமாக படித்துக்கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன் மற்றொருவனுக்கு விஷயங்களை விளக்கமாக சொல்லிக்கொண்டிருந்தான். சராமாரியாக சரித்திரம், "பாலிடிக்ஸ்" "எகானமிக்ஸ்": எல்லாம் அவன் வாயிலிருந்து வந்தன- சர்ச்சில் செய்தது நியாயமா, ஸ்டாலின் செய்தது நியாயமா, யுத்தத்தின் பிற்காலம் எந்த நாடு எந்த நிலைமையில் இருக்கும் என்று ஓயாது வெளிப்படுத்திக் கொண்டிருந்தான். அவன் பேசுவது உண்மையா அல்லது "கதை"யா என்றும் சந்தேகமாயிருந்தது. உலக விவகாரங்களில் எனக்கு ஸ்ரத்தையிருந்தாலும், தெரியாத விஷயங்களை இப்படி படபடவென்று அடிப்பது எனக்குப் பிடிக்கவில்லை. வேறு எங்காவது கவனத்தைச் செலுத்த எண்ணி பக்கத்தில் உள்ளவர் கையிலிருந்த பத்திரிகையை கவனித்தேன். அதில் கிரிக்கெட் பந்தயத்தைப்பற்றி சுவாரஸ்யமான விஷயம் காணப்பட்டது படிக்கலாம் என்று திரும்பியதும் அந்த மனிதருக்கு என்னவோ எனக்கு பத்திரிகையைக் காண்பிக்க அருவருப்பாய் இருந்தது. நானும் எழுந்து சென்று ப்ளாட்பாரத்தை நாலு ஐந்து தடவை அங்குமிங்கும் அளந்தேன். அந்த சமயத்தில், என் தாயாரின் அண்ணா பையன் சுந்தரம். எதிரில் தென்பட்டான். "என்னடா. யாரை எதிர் அழைக்கப் போகிறாய்?" என்றான். அவனுக்கு பதினைந்து வயது. ஐந்தாவது பாரத்தில் படிக்கிறான். "என் அண்ணா த்யாகராஜன் இந்த வண்டியில் வரப்போகிறான் என்றேன். ஓஹோ அவன் இப்போது என்ன வேலை பண்ணுகிறான்?" "திவான் ஆபீஸில் என்னவோ வேலை." "ஆமாம். நல்ல உறவு அண்ணா தம்பி, யார் என்ன பண்ணுகிறார்கள் என்று ஒருத்தருக்கொருவர் தெரியாது." என்று சொல்லிக்கொண்டே போய்விட்டான். இவனுக்கு என்னைக் கண்டால் பிடிக்காது. நாங்கள் தாதாவிற்கு சிலவு வைத்ததால் இவனுடைய அப்பாவுக்கு ஆஸ்தி ஒன்றும் கிடைக்கவில்லை என்று எங்கள்மேல் கோபம். பேசாமல் அங்கேயே நின்றுகொண்டு ஏதோ யோசனைகள் செய்துகொண்டிருந்தேன். இதன் மத்தியில் மற்றொரு ப்ளாட்பாரத்தில் வண்டிவந்து சேர்ந்துவிட்டது. ஜனங்கள் எல்லோரும் இறங்கிக் கொண்டிருந்தார்கள். கூட்டத்தைக்கண்டு திரும்பினதும் ரயில் வந்திருப்பதைக் கண்டேன். உடனே அவசரமாக அண்ணாவைத் தேடப் புறப்பட்டேன். ஆனால் அவன் முதலிலேயே இறங்கி என்னை நோக்கி வந்துகொண்டிருந்தான். இருவரும் வீட்டுக்கு புறப்பட்டோம். வழியில் சுந்தரம் மறுபடியும் குறுக்கிட்டு "இவர்தான் உன் அண்ணாவோ" என்று ஏளனமாக கேட்டுவிட்டுப்போனான். "ஜயராமா. அது யார் அவ்வளவு மரியாதையாகக் கேட்கிறது?" என்று என்னைக் கேட்டான். "அது எல்லாம் சகஜம்தான் அண்ணா

(அடுத்த பக்கம் பார்க்க.)

(முன் பக்கத் தொடர்ச்சி.)

## என் அண்ணு



அவர்களுக்கு" என்றேன். "இவன் "என் மாமா பையன், ஆனுல் இவன் அண்ணு ஒருவன் என்னுடன் படித்தான் அவன் ரொம்ப நல்ல பையன்." "என் சொந்தக்காரர்கள்தான் அலாதி என்ருல் உனக்குமா இப்படி வாய்த்தார்கள்" என்ருன். இல்லே, அண்ணு. எல்லாரும் இப்படி இல்லே." என்றேன். ஏனே அந்த சமயத்திலும் ஒருவரையும குற்றம் கண்டுபிடிக்க என் மனம் இடம் கொடுக்கவில்லே. என் செய்வது? நம் விதி நாலுபேரை அண்டி வாழவேண்டும் என்று எழுதியிருந்தால், அவர்கள் சொல்வதையும் கேட்கத் தயாராயிருக்க வேண்டும்.

வீடு சென்றதும் என் பாட்டி அவனே அன்புடன்தான் வரவேற்ருள். "என்னமோ, உங்களேயெல்லாம் உங்கள் அப்பா அம்மா எல்லோரும் சிறிசுகளாகவே விட்டுவிட்டுப் போய்விட்டார்கள். நீங்கள் சமத்தாக இருக்கிறது மாதிரி அப்பா, அம்மா, வளர்த்திய குழந்தைகள் கூட இருக்காது. கஷ்டத்திலேயே வளர்ந்தா தானுக முன்னுக்கே அறிவும் வந்துவிடுகிறது." என்ருள்- என் அண்ணுவுக்கும் என் பாட்டியிடம் அதிக மரியாதை. "என்ன பண்ணுகிறது, பாட்டி? நாங்களாக ஒருத்தருக்கு கஷ்டம் கொடுக்கக்கூடாது என்றிருந்தாலும் எங்கள் காலம் கெட்டுப்போய் நாலுபேருக்கு பாரமாக இருக்கவேண்டியிருந்தது. உங்கள் தயவினுலே விஜயமும் ஜயாராமனும் கௌரவமாக தாட்ட முடிந்தது. தாதாவின் ஆசீர்வாதம் எப்பவும் குழந்தைகளுக்கு நல்லது செய்யும் என்ருன். "உங்களுக்கும் வயசு ஆய்விட்டது, அப்பா. எங்கேயோ எல்லாரும் சௌக்கியமாக இருந்தால் சரி. ஏதோ எங்கள் கடமையை நாங்கள் செய்தோம்" என்று சொல்லிவிட்டு காரியம் செய்ய சென்றுவிட்டாள்.

என் அண்ணு குளித்துவிட்டு சாப்பிட உட்காரும் சமயத்தில் என் சிறிய தாயாரும், மாமாவும் நுழைந்தார்கள்.

"என்னப்பா, எப்பொழுது வந்தாய்? ஏன் கடிதம் ஒன்றுமே எழுதுகிறதில்லே? உனக்கு இங்கே ஒரு தம்பி இருக்கிருன் என்று ஞாபகமேயில்லேயோ?" என்று கேட்டுக்கொண்டே நாற்காலியில் உட்கார்ந்தார் என் மாமா.

"நாலு வார்த்தை கடிதத்திலே எழுதுகிறது என்ன பலன்? எல்லாரும் சௌக்கியமாக இருக்கிருர்கள் என்று கேள்விப்பட்டாலே சரி. ஒருத்தருக்கு உபகாரம் பண்ணுகிற நிலேமையில் நான் இல்லே. வெறும் வார்த்தையில் என்ன பிரயோஜனம்? என்ருன். அவனுக்கு இன்னும் இங்குள்ள மனிதர்களுடைய தனி குணங்கள் தெரியாது.

"ஆமாம், இல்லாவிட்டால் நீ உபகாரம் பண்ணித்தான் இவர்களே உத்தாரம் செய்வது என்று இங்கு யாரும் இருக்கவில்லே. எங்கள் அப்பா ரொம்ப உதார குணம். சொந்த பெண்பிள்ளேகளேக்கூட கவனிக்காமல் உன் தம்பியையும் தங்கையையும் பார்த்துக்கொண்டு வந்தார். எங்கே கடிதம் போட்டு விசாரித்துவிட்டால் நம்கையை கடித்துவிடுமோ என்று நீ திரும்பிக்கூட பார்க்கவில்லே. இவர்களும் பெரியவர்களானபிறகு எங்களேயும் ஏன் என்றுகூட கேட்கமாட்டார்கள்" என்று ஆரம்பித்துவிட்டாள் என் சித்தி. எனக்கு இவர்களேப் பார்க்கும்போதெல்லாம் ஒரு பயம்தான். என் அண்ணுவிடம் இவைகளே இடித்துச்சொல்வதில் பயன் என்ன? அவன் என்ன எங்களுடன் கூடப்பிறந்தவன்? விதியின் வசம் அவன் அனுதையானவனு. அப்படியாவது அவன் நல்ல ஸ்திதியில் இருக்கிருனு? அல்லது அவனுக்குத்தான் வயதாகிவிட்டதா? எங்கள் பாரத்தையும் ஏற்றுக்கொள்வதற்கு? எனக்கு சில சமயம் இம்மாதிரி இவர்கள் குத்திப் பேசுவதை அடிக்கடி கேட்க கோபமாகிவிடும். ஆனுல் இவர்களிடம் பொறுமையாகத்தான் கேட்டுக்கொண்டிருப்பேன். போன தடவை என் அண்ணு வந்திருந்தபோதே சொன்னேன் "ஏனண்ணு, இவர்கள் ஏன் நம்மை வீட்டில் கொண்டு வந்து வளர்த்திஞர்கள். அடிக்கடி சொல்கிருர்களே, நாங்கள் சோறு போடாவிட்டால் தெருவில்தான் நிற்க வேண்டும்" என்று. அப்படி தெருவில் நின்ருல்கூட எனக்கு சந்தோஷமாகத்தான் இருக்கும், இப்படி இவர்களிடம் இடிபடுவதைவிட" என்றேன். ஜயாராமா வீணுக அலட்டிக்கொள்வதில் பிரயோசனமில்லே. காலம் கெடுதலாயிருந்தால் கஷ்டம் எந்த விதத்திலாவது வந்துதான் தீரும். ஏதோ அதிர்ஷ்ட வசமாக உன்னேக் காப்பாற்ற ஒரு பெரியவர் இருப்பதை நினேத்து சந்தோஷப்படு. இவர்கள் சொல்வதை எல்லாம் நீ பெரியவனுகும்வரை பொறுத்திரு. அப்புறம் விலகிக்கொள்ளலாம். இவர்களேயும் நீயாக எதிர்த்துக்கொள்ளாதே." என்று சொல்லியிருந்தான். இதைக் கூட ஒட்டுக் கேட்டுக்கொண்டிருந்த என் மாமா பையன் இதை வீட்டில் சொல்ல என் சித்தி" எல்லாம் சுயநலப் புலிகள். தன் காரியம் ஜயிக்க என்ன வேணும் ஆனுலும் செய்வார்கள் என்று சொல்லியிருந்தாள். அன்று இரவு என் தாதாகூட எங்களுக்கு பரிந்துகொண்டு அவர்களுடன் பெரிய சண்டையிட்டது இன்னமும் ஞாபகமிருக்கிறது, பிறகு என்னதான் இவர்கள் செய்தாலும் என் தாதாவின் ஞாபகத்தை வைத்துக்கொண்டு நான் மனதை சமாதானப்படுத்திக்கொண்டேன்.

ஆனுல் இன்ரே எனக்கும் கொஞ்சம் வயதாகிவிட்டது, சம்பாத்யமும் கொஞ்சம் இருக்கிறது. இவர்கள் எங்களுக்காக எவ்வளவு ரூபாய் செலவழித்திருக்கலாம்? மாதம் 40 ரூபாய் வீதம் பத்து வருஷத்திற்கு சுமார் 5000 ரூபாய் இருக்கலாம். இதை நான் ஏன் இவர்களுக்கு சிறிது சிறிதாக திருப்பிக்கொடுக்கக்கூடாது? என் அண்ணுவும் நானும் ஆளுக்கு மாதம் ரூ. 10 வீதம் கொடுத்துவரலாமே என்றெல்லாம் எண்ணலானேன், இவ்விஷயத்தைப்பற்றி என் அண்ணுவிடம் பேசவேண்டுமென்று ஆவல்.

என் அண்ணுவுக்கு அதிக பொறுமையும் சாமர்த்யமும் உண்டு. "ஏன் அப்படி என்ன யாராவது உங்களுக்கு மரியாதை செய்யாமல் இருந்தோமா" என்று கேட்டான்.

இந்த சமயத்தில் பக்கத்தில் குடியிருந்த ஒரு வக்கீலொருவர் "த்யாகராஜன் வந்துவிட்டானு" என்று விசாரித்துக்கொண்டே நுழைந்தார். அவர் ஊரில் பெரிய மனிதர். நல்ல செல்வாக்கும் பணமும் உண்டு. அவருக்கு ஒரு பிள்ளேயும் ஒரு பெண்ணும்தான். மனேவி கூட இல்லே. எங்களுக்கும் அவருக்கும் அதிக பழக்கம் கிடையாது. ஆனுல் என் மாமா மாத்திரம் தன் பையனுக்கு அவர் பெண்ணேக் கல்யாணம் செய்துவிடவேண்டும் என்று வெகுபாடுபடுகிருர் என்று தெரியும்.

இவர் இப்படி வந்தது எங்களுக்கே ஆச்சரியமாக இருந்தது. என்னுடன் சாப்பிட்டுக்கொண்டிருந்த என் அண்ணுவைப் பார்த்து "ஏனப்பா, நீதான் தியாகாராஜனு? என் பையன் கோபாலனே உனக்குத் தெரிந்திருக்குமே? உன் கூட ஒரே ஆபீசில் வேலே செய்வதாக எழுதியிருக்கிருனே?" என்று கேட்டார்.

உட்காருங்கள். நீங்கள் தான் கோபாலன் தகப்பனுரோ? போன தடவை வந்தபோது கூட உங்களேப் பார்த்துவிட்டுப் போகவேண்டுமென்றிருந்தேன். ஆனுல் உங்கள் விலாஸம் மறந்துவிட்டேன்" என்ருன்.

"நீ சாப்பிட்டுவிட்டு எங்கள்வீட்டுக்கு சிறிது நேரம் வந்துவிட்டுப் போயேன். பேசவேண்டியது இருக்கிறது. ஜயாராமனுக்கு வீடு தெரியும்" என்று சொன்ஞர்.

"அதற்கென்ன வருகிறேனே. அது சரி, இந்திராவிற்குக் கல்யாணம் நிச்சயமாகிவிட்டதா?"

"ஆனமாதிரிதான். சரி, நீ வா கட்டாயம். நான் போய் வருகிறேன்" என்று சொல்லிவிட்டுக்கிளம்பிவிட்டார்.

என் சித்தி முகத்தைத் தோளில் இடித்துக்கொண்டு போய்விட்டாள். என் மாமா பேசாமலே கிளம்பிவிட்டார்.

என் பாட்டியும் சாப்பிட்ட பிறகு என் அண்ணு மெதுவாகப் பேச ஆரம்பித்தான்.

"என் பாட்டி, ஜயாராமன் சமத்தாக தானே இருக்கிருன்"

"அவனுக்கென்னப்பா, அவன் அப்பா அம்மா இருந்து பார்க்கக் கொடுத்து வைக்கவில்லேயே என்று தான் வருத்தம்" என்று சொல்லும்போதே கண்ணீர் வந்தது.

"விஜயத்தைப் பற்றி க்ஷேம சமாசாரம் தெரியுமா?"

"அவள் சிறிய மாமியாரைப் பார்க்கிறேன். சௌக்யமாக இருப்பதாக அடிக்கடி சொல்கிருள். வீட்டில் அவளேத் தாங்கித் தாங்கி வைத்துக் கொள்ளுகிருர்கள். அவளே நேரில் பார்க்கவேண்டும் என்று எனக்கு ஆசைதான். ஆனுல் அவள் புருஷன் இங்கே வருவதே யில்லே. ஆனுல் வந்தால்தான் யார் அவளிடம் ப்ரியமாக இருக்கிருர்கள்? என்னே ஒருத்தியை மாத்ரம் பார்த்துவிட்டுப் போக முடியுமா? போன மாதம் தான் முத்து (என் பெரியம்மா) மதராஸ் போயிருந்தபோது பார்த்துவிட்டு வந்தாள். சந்தோஷமாயிருக்காள் என்று சொன்னுள். என்னேப் பார்க்கவேண்டும் என்று அவளும் சொன்னுளாம். நல்ல பெண். எங்கேயோ புருஷனுடன் சௌக்யமாக யிருந்தால் சரி."

"என் பாட்டி, இங்கே இவர்களே அவ்வளவா ஒருவரும் ப்ரியப்படுவதில்லேயே? இவர்கள் ஏதாவது அவமரியாதையா நடக்கிருர்களா.?

"அதெல்லாம் ஒன்றுமில்லே. குழந்தையெல்லாம் சாது தான். நாலு பேர் சுவபாவம் ஒருஒரு மாதிரித்தான்இருக்கும்." பாட்டிக்கு தன் வீட்டைப் பற்றி அதிகம் பேச மனம் வரவில்லே.

சாப்பிட்டுவிட்டு என் அண்ணுவும் நானும் வக்கீல் வீட்டுக்குப் போனேம். "வா அப்பா, த்யாகராஜு, நீ கூட என் சம்சாரத்தை நன்ருகத் தெரிந்துகொண்டிருப்பாயே. அப்போது கோபாலனுடன அங்கே வந்திருக்கும் சமயத்தில் டைபாய்ட் ஜுரத்தில் படுத்திருந்தபோது நீயும் கூட இருந்து உபகாரம் செய்தாயென்று சொன்னுள்."

அவர் பெண் இந்திரா ஒரு பாயைக் கொண்டு வந்து கூடத்தில் விரித்தாள். நாங்கள் எல்லோரும் உட்கார்ந்தோம். கோபாலனேப் பற்றியும் வேலேயைப் பற்றியும் வெகு நேரம் விசாரித்துக்கொண்டிருந்தார். பேச்சு வாக்கில், என் அண்ணுவின் தாய் பந்துக்களே விசாரித்துக்கொண்டு வந்தார். ஏதோ நினேவாகக் கூறையைப் பார்த்துக்கொண்டிருந்த நான் திடீரென்று அவர்கள் பேசுவதில் உற்சாகமடைந்தேன்.

"நீ அப்போ ராமண்ணு பையனு? அடே, என் பெரியப்பா பெண்ணல்லவோ உன் தாயார்! நீ என் மருமானடா! இந்தக் காலத்திலே தங்கள் குலம், சொந்தம் ஒன்றுமே சரியாகத் தெரிவதில்லேயே! என் தகப்பனுர் சாகும்போது கூட 'விசாலாக்ஷி குழந்தை இட்போது எங்கே இருக்கிருன் என்றே தெரியவில்லே. அவன் பெரியப்பா போன பிறகு என்ன செய்கிருனே! வயதானதால் அவனுவது கடிதம் போடுவான் என்று எதிர்பார்த்தால் ஒரு தகவலேயும் காணேம். என் அண்ணுவுக்கு அருமையாக ஒரே ஒரு பேரன்' என்றெல்லாம் சொல்லிக்கொண்டிருத்தார். நீ என்ன விதமாக காலம் தாட்டினுய் இவ்வளவு நாளா? தெரிந்தவர்களேக் கேட்டாவது சொந்த ஜனங்களின் விலாஸத்தைத் தெரிந்து கொள்ளக்கூடாதா?" என்று ஆச்சரியத்துடனும் பரபரப்புடனும் கேட்டார்

"எனக்கு சொந்தக்காரர்கள் அவ்வளவாக இல்லே என்று நினேத்திருந்தேன். என் தாதாவிற்கு என் தாயார் ஒரே பெண்தான் என்று என் அப்பாசொல்லியிருக்கிருர். அப்பா இருந்த வரை என் அம்மா வீட்டு மனிதர்கள் என்று எனக்கு யாரையும் தெரியாது. பிறகும் என் பெரியப்பாவை மாத்திரம் தான் தெரியும். அவர் எப்போதோ சொல்லியிருக்கிருர் யாரோ ஒருவர் ராவ் பஹதுராம் எங்கேயோ பணக்காரராம். அவர் என் சிறிய தாதா என்று. ஆனுல் எனக்கு அந்த வம்ஸாவளியே தெரியாதே."

"அந்த ராவ் பஹதுர் பிள்ளேதானப்பா நான். என் தகப்பனுர் காலமாய் எட்டு வருஷமாயிற்று. நீ எங்கேயிருக்கிருய் என்றே அவருக்குத் தெரியவில்லே என்ருர்".

சரி, எங்களுக்கு அன்று அங்கேயே விருந்து. வேறு ஏதோ ஒரு வரனேப் பார்த்து நிச்சயித்து இருந்த வக்கீலும் இந்திராவை என் அண்ணுவுக்கே கொடுக்க நிச்சயித்துவிட்டார். ஜாதகமும் பார்க்கவில்லே.

சாயந்திரம் நானும் என் அண்ணுவும் தனியாக ஆற்றங்கரையோரமாக உலாவச் சென்ரேம்.

"ஜயாராம், நீ சிறு பையன். உலகத்தை இன்னும் அறியவேண்டும். என்னதான் வாழ்க்கையில் கஷ்டமேற்பட்டாலும் தோல்வி மனப்பான்மை வரக்கூடாது. ஒரு மனிதனிடம் உள்ள நல்ல குணங்கள்தான் ஸ்திரமானவை. தீயகுணங்கள் அடிக்கடி தலே தூக்கி நின்ருலும் அவைகளேக் கண்டு பயந்துவிடக்கூடாது. யாரோ நாலு பேர் நம்மைக் குறித்து இழிவர்கச் சொல்லுகிருர்கள் என்று வருந்தாதே. அந்த நாலுபேரும் கூட சந்தர்ப்பம் பார்த்துத் தான் நடப்பார்கள். நீ நல்ல ஸ்திதிக்கு வந்து கௌரவமாக வாழ்க்கை நடத்தும்போது இதெல்லாம் தானுக நின்றுவிடும். இவர்களுடைய நடத்தையை விட உன் தாதாவுடைய பெருந்தன்மை தான் உன் மனத்தில் பதியவேண்டும். அவரைப்போல் நாமும் காரியத்தில் தான் பேசவேண்டும், அவரைத் த்ருப்தி செய்யவேண்டுமென்ருல் நீ இவர்களுக்கெல்லாம் பணிந்தே இரு."

"சரி, அண்ணு" என்றேன்.

---

# ★ பூக்காரி ★

★

—: 'துறைவன்' :—

ஹேமாவின் திருமண அழைப்பிதழைப் பார்த்ததும் எனக்கு அளவிறந்த ஆச்சரியம் உண்டாயிற்று. கல்லிலே கண்ணுடியை ஓங்கி அடிக்கிறேன். அது நொறுங்கவில்லை சுக்கு நூருகப் போகவில்லை. நெளிந்து கொடுக்கிறது என்ருல்கூட அவ்வளவு ஆச்சரியப்பட்டிருக்கமாட்டேன்.

'காதல், காதல் என்று வாய் கிழியப் பேசி காவியம அளப்பதெல்லாம் வீண் புரளி. செயலில் இறங்காத ஒரு சீமைச் சரக்கு" என்ற சந்தேகம் நிமிர்ந்து உட்கார்ந்தது.

அவள் நரேந்திரனை நிராகரித்துவிட்டாளா? அல்லது அவனே அவளைப் புறக்கணித்துத் துரோகம் இழைத்துவிட்டாஞ? இதுதான் கேள்வி. என்ஞல நம்பவே முடியவில்லை, அவள் அவனை ஏமாற்றியிருப்பாளென்று.

வாளம் நீலத்தை ஏமாற்றிவிடுகிறது, கடல் அலையை மறந்துவிடுகிறது என்ருல் உங்களால் நம்ப முடிகிறதா?

எவ்வளவு அந்யோந்யமாகப் பழகினுர்கள்? எவ்வளவு அற்புதமாகக் கடிதங்கள் எழுதிக்கொண்டார்கள்? ஒருவருக்கொருவர் எவ்வளவு தோழமையோடு ஒத்துழைத்தார்கள்? ஒருவரையொருவர் சந்திக்க நேரிட்டால் எவ்வளவு இன்பவெறியுடன் புன்னகைபுரிந்துகொண்டார்கள்? என்றெல்லாம் எண்ணிப் பார்க்கிறேன். இந்தத் திருமணப் பத்திரிகை என்ன சொல்கிறது என்பதையும் மறுபடியும் மறுபடியும் படிக்கிறேன். எத்தகைய முரண்பாடு? எவ்வளவு அசம்பாவிதமான காரியம்!

"காதல் என்பது தமுக்கைப் போல. உள்ளே தோலும் மூங்கிலும் மூட்டிய உடக்கு. கூரலோ காது செவிடுபடுகிறது" என்று எங்கேயோ படித்தது முன்ஞல் வந்து நின்றது.

'புதிய அநுபவம் ஒன்று உனக்காகக் காத்திருக்கிறது. போ, அவர்களிருவரையும் போய் விசாரி. உனக்குள்ளேயே வளையம் அடித்துக்கொண்டிருக்காதே" என்று தூண்டிவிட்டது என்னுள்ளே இருந்த கதாசிரியத்தனம்.

* * *

ஹேமாவைப் பார்க்கப்போகுமுன், அவளை அடுத்த வெள்ளிக்கிழமையன்று ஏற்றுக்கொள்ளப் போகிற இளைஞன் நரேந்திரன் அல்ல என்று கல்யாணப் பத்திரிகையைப பார்த்து இன்னெருமுறை நிச்சயப்படுத்திக்கொண்டேன்.

பரீட்சை நெருங்கிவிட்டது. கல்லூரியில், பரீட்சைக்குப் படிப்பதற்காக விடுமுறை கொடுத்துவிட்டார்கள். படித்து முடிக்கவேண்டிய பகுதிகளோ ஹிமோக்ரபர்வதம் போல் நிமிர்ந்து கிடக்கிறது. ஆனுலும் மேற்படி விவாகப் புதிருக்கு விடை கண்டுவிட்டுத்தான் புத்தகங்களைத் தொடவேண்டும் என்று சங்கற்பம் செய்துகொண்டேன்.

ஹேமலதாதேவியின் பங்களா ராதா சவுக்கத்தில ஒரு ரமணீயமான தோட்டத்தின் மத்தியில் இருக்கிறது. வாசலில் இரண்டு கமுக மரங்கள், யாகம் காத்து நின்ற ராமலக்ஷ்மணர்களைப்போல, என்னை வரவேற்று நிற்கின்றன.

படியேறியதும் முதல் அறை ஹேமாவின் படிப்பகம். நிலையில் நாணிக் குழையும் பட்டுத் திரை குழற்பாசி வேலைப்பாடு நிறங் காட்டி கிலுகிலுக்கிறது.

ஈரம் உலராத கூந்தலில் இரண்டு நீலோற்பலம் தலைகாட்டியசைய, ஹேமா 'ஷேக்ஸ்பியர்' விமர்சனம் படித்துக்கொண்டிருந்தாள். குரலில் காலையின் புதுமையும் இளமையின் மெருகும் சுதி கூட்டி நின்றன.

"நமஸ்காரம்" என்றேன்.

ஹேமா என்னும் அந்தப் புதிர் மலர் தலைநிமிர்ந்தது.

"அட...ரவி பாபுவா?...நமஸ்காரம்" என்று எழுந்து நின்ருள் ஹேமா.

"பரீட்சைக்குப் படிக்கிற வேளையில் தொந்தரவு கொடுக்கிறேனே?"

"தொந்தரவுதான். கேட்கவேண்டுமா? எதற்கு ஒரு உபசாரக் கேள்வி?" என்று சிரித்தாள் ஹேமா. ஹேமம் (—தங்கம்) கண்டு வெட்கும்படியான அவள் மேனி இன்னும் ஒரு மாற்று உயர்ந்தது.

நான் வெட்கிப்போனேன்.

ஹேமா, "இரு, ஒரு நிமிஷம், காலையில் வந்திருக்கிருயே?" என்று சொல்லிவிட்டு வெளியே சென்ருள்.

அந்த மெத்தை தைத்த நாற்காலியில் மிதந்தவண்ணம் "என்ன பெண்ணடா இவள்? சீதை, சாவித்திரி, தமயந்தி முதலிய பாரதநாட்டுப் பெண்தெய்வங்களின் வழிச் சந்ததியா இப்படிப் பேசுகிறது?" என்று யோசித்துக்கொண்டிருந்தேன்.

எதிரே தோட்டத்தில் காலை ஒளி பனி படர்ந்த மரங்களின்மீதும் அற்புதம் சொரிந்து விளையாடிக்கொண்டிருந்தது. இலைகளின் நுனியில் திரண்டு நின்ற நீர்த்துளிகள் கிரணங்களைப் பருகிப் பிரகாசித்தன.

"என்ன, ரவி பாபு? என்ன பார்க்கிருய்? ஏதாவது கவிதை உதயமாகப்போகிறதோ?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே வந்தாள் ஹேமா.

"ஆமாம். திருமண வாழ்த்து ஒன்று புனைந்துகொண்டிருக்கிறேன். ஆனல் பெயர்களை இணைத்துப் பாடுவதுதான் கொஞ்சம் தட்டுகிறது" என்றேன்.

ஹேமா சற்றே தலை குனிந்தாள். என் எதிரே வந்து அமர்ந்தாள். புதியதோர் நாணம் வந்து சரண் புகுந்ததாகத் தோன்றிற்று. மறுகணம் நிமிர்ந்து சொன்ஞள்:—

"நீ தான் இலக்கணத்தைத் தள்ளிவிடுகிற கட்சியாயிற்றே, வசனக் கவிதை எழுதிவிட்டால் போகிறது. மோனை எதுகைத் தொல்லையில்லை" என்ருள் ஹேமா.

"யாரையும் அவ்வளவு எளிதில் உதறித் தள்ளி மறந்து விடுகிறவனல்ல நான்"—என்று விஷயத்தைக் 'குட்டாக' உடைத்தேன்.

ஹேமா சிரித்தாள் "முட்டாள், முட்டாள்," இதையா சொல்ல வந்தாய்" என்று கேட்டுச் சிரிப்பது போலிருந்தது.

அச்சிரிப்பொலி அறையின் நாற்புறமும் தொங்கவிடப் பட்டிருந்த போட்டோக்கள் எல்லாவற்றையும் தொட்டுத் தொட்டு எதிரொலித்தது.

ஒவ்வொரு படத்திலும் நரேந்திரனும் ஹேமாவும் காணப்பட்டார்கள். காலேஜ் தினக் கொண்டாட்டம் மகளிர் விழா வைபவம், சீர்திருத்த நாடகம், சங்கீதப்போட்டியில் நரேந்திரன் பரிசுபெற்ற தினம்

(அடுத்த பக்கம் பார்க்க)

(முன் பக்கத் தொடர்ச்சி)

# பூக்காரி



வசந்தோற்சவத்தின் போது ஹேமா தரித்துக் கொண்ட 'மன்மத' வேஷம் முதலியவற்றின் ஞாபகார்த்தங்களாக விளங்கிய அந்தப் படங்கள் நரேந்திரனையும் ஹேமாவையும் பற்றி என்னவெல்லாம் சொல்லுகின்றன!

முகத்தைக் கனமாக வைத்துக் கொண்டு நெஞ்சு படபடக்க வினவினேன்: "இது நிஜமா?"

"எது ?"

"உன் புதிய துணைவன்"

"பொய் என்ற சந்தேகம் எங்கிருந்து வந்தது?"

"என்னசொல்லுகிறாய்? ஹேமா? உன்னைச் சுற்றித் தொங்கும் இந்தப் படங்களைப் பார்த்தாயா? அதற்கு என்ன சொல்லுகிறாய்?"

"சொல்வதற்கு என்ன இருக்கிறது? நரேந்திரன் என்னுடைய அத்தியந்த நண்பன் தான். அதற்கு என்ன ?"

எனக்கு திகைப்பு அதிகமாயிற்று.

"என்னை மன்னிக்க வேண்டும், இப்படிக் கேட்பதற்கு. நீ உன் நரேந்திரனுக்குக் காட்டும் நன்றி இவ்வளவுதானா?"

ஹேமா கலங்கினாள். கண்கள் பரிவைக் கக்கின.

"ரவி, நீ சொல்வது ஒன்றும் புரியவில்லை. நரேந்திரனோடு பழகி வந்ததில் நான் வேறுஒன்றும் எண்ணவில்லையே? எல்லோரையும்விடச் சற்று அதிகமாக அவனிடம் பழகி வந்தேன் அவ்வளவு தானே ஆணும் பெண்ணும் தோழமை பூண்டு ஒரு துறையில் உழைக்கக் கூடாதா?"

"நாங்களெல்லாம் எப்படியெல்லாமோ நினைத்துக் கொண்டிருந்தோமே?"

"அதற்கு நான் என்ன செய்ய முடியும்? ஆணும் பெண்ணும் நண்பர்களாக இருக்கிறார்களென்றால், கல்யாணம் தானா அவர்கள் லட்சியமாக இருக்க வேண்டும்? பைத்தியக்காரத் தனமல்லவா அப்படிச் சொல்லுகிறது?"

'அப்படியானால் உங்கள் நட்பு வெறும் ......'

'ரவி, எனக்கு கோபம் வருகிறது. படித்தவனாகிய நீயே இப்படி எண்ணுகிறாயே? ஆணும் பெண்ணும் ஒருவரோடொருவர் மிகுந்த பரிவோடும் அன்போடும் கலந்து உறவாடுவதையா வெறும் நட்பு என்கிறாய்? உன்னுடைய மூளையையெல்லாம் பரீட்சைக்குப் படித்துக் கெடுத்துக் கொண்டு விட்டாயோ என்னவோ ?''

முழுதும் சொல்லிவிடு, ஹேமா. உன கருத்தையெல்லாம் தெரிந்து கொள்கிறேன். எனக்குத் தலை சுற்றுகிறது. இருந்தாலும்..."

"ஆகா! இந்தக் கருத்தைத் தெரிந்து கொள்ளாமல் தானே நம் இளைஞர்கள், பெண்களது சாரமான பருவமெல்லாம் ஒளியற்று உணர்ச்சியற்று சக்கை தட்டிப் போய்விடுகிறது! இளமை வசந்தத்தில், பூக்காத மாமரம் உண்டா? அதனோடு குலாவாத தென்றல் தென்றல் ஆகுமா? அன்பை யார் மீதேனும் சொரிந்து விடவேண்டும் என்ற அடங்காத இளமை ஆவலுக்கு இடமில்லா விட்டால், இளமை இன்பம் எது? அந்தத் தூய அன்பு ஊற்று வற்றிவிட்டால், உயிர் சுமந்து வாழ்வது கசந்தல்லவா போய்விடும்? காதல் அன்பு ஒன்று தானா உலகத்தில் இருக்கிறது, ஆணையும் பெண்ணையும் இணைத்து? நரேந்திரன் என்மேல் வைத்திருந்த அன்புதான் எத்தகையது? அது காதலாக இருக்கவேண்டிய அவசியம் என்ன வந்தது? அந்த அன்பினாலல்லவா நரேந்திரனது இளமை வாழ்க்கை தவறுதல் ஒன்றுமில்லால் சங்கீதம் போல் கழிந்தது!"

"இத்துடன் சிற்றுரையை முடித்துக் கொள்கிறாயாக்கும். நல்லது. வந்தனோபசாரம்..."

"விளையாட்டுக்கு இல்லை, ரவி. இதையும் செல்லிவிடுகிறேன் கேள். நீ என் அண்ணாவைப் போலத் தானே! உன்னிடம் என்னஒளிப்பு? என்னுடைய காலேஜ் வாழ்க்கை கொஞ்சங்கூடத் தவறுதல் இல்லாமல், சிறிதும் சஞ்சலமில்லாமல் கழிந்ததென்றால் அது நரேந்திரன் என் மேல் வைத்திருந்த பரிசுத்தமான பிரேமையினால் தான். இப்பொழுது நாங்கள் விலகிக் கொள்கிறோம் என்று நினைக்கிறாய்? உண்மையில் இனிமேல் தான் எங்கள் நட்பின் ஒளி பன்மடங்கு பிரகாசிக்கப் போகிறது!"

"தேவலோகத்து வாழ்க்கையைப் பற்றி இன்னும் நன்றாகப் பேசலாம்!"

"அப்படிச் சொல்லாதே, ரவி. என்றைக்கு உயர்ந்த வாழ்க்கை வாழத்தான் வாழுவேன் என்று சங்கற்பம்பண்ணிக்கொள்கிறாயோ, அன்றே நீ அமரத்தன்மை பெற்று விடுகிறாய். தெய்வ வாழ்க்கை வாழ்வது மகா கஷ்டமான காரியம் என்று நீ நினைக்கிறாய், ஆனால் உண்மையென்னவோ அதுவல்ல என்று தோன்றுகிறது. உயர்ந்த வாழ்க்கை வாழ்வதுதான் மிகவும் எளிது. ஈசுவரனுடைய கருணைப் பலம் உனக்கு உதவிசெய்கிறது கடவுளை விரட்டிக்கொண்டல்லவா கீழான வாழ்க்கையில் இறங்க வேண்டியிருக்கிறது. வெறும் லட்சியப் பேச்சில் என்ன இருக்கிறது? பேசினால் அதன்படி நடக்க முயற்சி செய், இல்லாவிட்டால் பேசுவானேன்?"

"சரி, உன்னுடைய வாழ்க்கைத் தத்துவத்தை இந்தச் சமூகம் ஏற்றுக்கொள்ளவேண்டாமா?"

"ஏற்றுக்கொள்ளும்படி வற்புறுத்துவேன். என் வாழ்க்கை பிறகு எதற்கு உபயோகப்படப் போகிறது? என் கணவனாக வரப் போகிறவனுடைய பூரண நம்பிக்கை எனக்கிருக்கும்போது சஞ்சலத்திற்கோ பயத்திற்கோ இடமேது? மாமரம் தன் கனிகளை மனிதனுக்கு அர்ப்பணம் செய்கிறது. ஆனால் தென்றலுக்கும் வண்டுக்கும் அது அன்பு செலுத்துவதில் என்ன தவறு?

சற்றுநேரம் இந்த இனிய உவமையைச் சுவைத்துவிட்டுக் கேட்டேன். "சரி...உன்னுடைய இந்த சுயம்வரத்தைப்பற்றி நரேந்திரன் என்ன நினைக்கிறான்?"

"என்ன எழுதுவான்? பேசாமல், கல்யாணத்திற்கு வருவான், என் அன்புக் கடிதங்களைத் தன் வாழ்க்கைப் பாதையில் நீரூற்றுக்களாக அமைத்துக்கொண்டு வாழ்க்கை தொடங்குவான், என்னைப்போலவே. நாற்றங்காலில் ஒன்றாய்ப் பழகியசையும் நாற்றைப் பிடுங்கிப் பல்வேறு இடங்களில் நட்டுவிடுகிறோமல்லவா? அதைப்போலத் தானே வாழ்க்கைப் பயிரும். நாற்றங்காலில் அந்தச் சிறு காலவரம்புக்குள் இரு பயிர்கள் தங்களுக்குள் நேசம் காட்டுவதில் தவறு ஒன்றுமில்லையே?

"சரிதான், ஹேமா. உன்னை இன்றுதான் புரிந்துகொண்டேன்" என்று பெருமூச்சுவிட்டேன். என் மனத்தில் நெடுநாளழுக்கிக்கிடந்த கூளங்களை எற்றிப் புதுப்புனல் விரித்த அவள் ஆன்ம வேகம் எனக்கு புதிய கண்கள் இரண்டைத் தந்தது. ஒன்றுமே படித்துக் கொண்டுபோகாத பரீட்சையில், எல்லாக் கேள்விகளும் தெரிந்த கேள்விகளாக வந்துவிட்டதுபோலிருந்தது.

வேலைக்காரன் ஒரு சீனத் தட்டில் சிற்றுண்டி கொண்டுவந்தான்.

ஹேமா சிரித்துவிட்டாள்.

"ரவி, உன்னை இவ்வளவு நேரம் பாடாய்ப் படுத்திவிட்டேன்போலிருக்கிறது. சரி, இந்தா, 'கிரஷ்' இருக்கிறது. நீதான் காப்பி சாப்பிடுகிறதில்லையே!" என்றாள்.

'கிரஷ்' என்னை மேகமண்டலத்திலிருந்து பூமியில் கால் பாவி நடக்கும்படியான நிலைக்கு மீண்டும் அழைத்துவந்தது.

எதிரே தோட்டத்தில் தளிர்களின் நுனியில் திரண்டு நின்ற நீர்த் துளிகளோடு ஒளிக்கிரணங்கள் விளையாடிய காட்சி மறைந்துவிட்டது. ஒளிக்கதிர்கள் வேறு எங்கேயோ ஒரு அலையில் தங்களை அர்ப்பணம் செய்துவிடப்போய் விட்டன.

"நரேந்திரன் பரீட்சைக்குப் படித்துக்கொண்டிருப்பான். வீணாய் அவனைப்போய்த் தொலைக்காதே, ரவி" என்றாள் ஹேமா.

* * *

நாலைந்து நாட்களுக்குப் பிறகு நரேந்திரனிடமிருந்து ஒரு சிறு கடிதம் வந்தது. அதைப்படித்த அதிர்ச்சி இன்னும் என்னைவிட்டு நீங்கியபாடில்லை.

"......அட ரவி! முட்டாளாக எப்பொழுது ஆனாய்? ஹேமா எனக்கு எழுதியிருக்கிறாள், உன்னைப்பற்றி.

கேளடா, சூன்யம், கேள். புஷ்பக்காரி ஒருத்தி தனது கூடையில் எத்தனையோவிதமான புஷ்பங்களைக் கொட்டிக்கொண்டு விற்கப் போகிறாள். மல்லிகை, செவ்வந்தி, குண்டுமல்லிகை, ரோஜா, காட்டு மல்லிகை, எத்தனையோ மலர்கள்! கூடையில் வைத்து ரோஜாவின் கன்னத்தோடு கன்னமாய் செண்பகம் ஒன்றி முத்தமிடுகிறது. காட்டு மல்லிகை தன் வாச வெறியை நீலோற்பலத்தின் இதழிற் கலக்கிறது. எல்லாம் எவ்வளவு நாழிகை நேரம்? பூக்காரி ரொம்ப அவசரக்காரி. கூவிக் கூவி விற்றுவிடுகிறாள். விற்றுவிட்டால் செண்பகம் யார் குழலிலோ? காட்டுமல்லிகை யார் மார்பிலோ? பிறகு அவற்றுள் என்ன தொடர்பு? பிரிந்து சென்று விடுதல் மலர்களின் தவறா? என்ன நான் சொல்கிறது?"

ஆம், ஹேமா ஒரு நீலோற்பலம். நான்......நான் ஒரு காட்டு மல்லிகைப்பூ என்று வைத்துக் கொள்ளேன். காலம் என்ற பூக்காரி ரொம்ப அவசரக் காரிதான். நீலோற்பலத்தை அதற்குள் விற்றுவிடப் பார்க்கிறாள்!

...சரி... 'அல்ஜீப்ரா' மட்டும் ஒரு வண்டிப்பாரம் இருக்கிறது, படிக்க. எப்படித்தான் முடிக்கப் போகிறேனோ? நீ எல்லாவற்றையும் மூன்றும் முறை "ரிவைஸ்" பண்ணிக்கொண்டிருப்பாய். ஆரியக் கூத்து ஆடினாலும், உனக்குக் காரியத்திலே கண்— நரேந்திரன்.



ஒவ்வொரு மனிதனும் அவன் ஜீவிய காலத்தில் பிறரை நேசித்து நன்மை செய்வது என்பது ஒன்றுதான் ஆண்டவனின் கட்டளைப்படி நடப்பதாகும், அது தான் மனிதன் ஆண்டவனுக்குச் செய்துகொள்ளும் பிரார்த்தனைகளை நிறைவேற்றும் ஒரே முறை!

—லியோடால்ஸ்டாய்.

---

சிறு கதை — ரா. ஸ்ரீநிவாஸன்.

# "விடுதலை!"



"சாந்தினி! எங்கே, அந்த சித்திரத்தை கொஞ்சம் எடுத்துவருவாயா? என்றுமேயில்லாது ஏனோ இப்படி என் மனம் குமுறுகிறது. அதைப் பார்த்தாகிலும் சற்று ஆறுதலடைகிறேன்" என்றுகொண்டே குழந்தையை மார்மீது கிடத்திக்கொண்டு அங்குமிங்கும் பித்துப் பிடித்தவனைப்போல நடைபோட்டுக் கொண்டிருந்தான் ஜீவகுமார். ஓவியக் கலையில் அளவற்ற புகழ் தாங்கியவன் அவன். நாடெங்கும் அவன் திறன் கண்டு போற்றிற்று. ஆனால் தன் வாழ்வில் வந்தடைந்த ஒரு பெரும் ஏமாற்றத்தினால் தன் கலையை உதறித்தள்ளிவிட்டு வேண்டுமென்றே ஏழ்மையை அணைந்தான் அவன். இல்லாவிட்டால் அச்சின்னஞ்சிறு குழந்தையின் முகத்திலுமா அப்படி ஏழ்மை பிரதிபலிக்கும்? விதவிதமான ஆடைகளைப் போட்டு அழகு குலுங்கப் பார்க்கமுடியும் அக்குழந்தையை. ஆனால் அழகைப் பார்க்கும் கண்தான் ரூபா சென்றதினின்று அவிந்துவிட்டதே! ஏதோ மூச்சிருந்து குழந்தையென்று பெயரளவில் இருந்தால் போதும் என்றெண்ணினான் அவன். "எங்கே சித்திரம் சாந்தினி..." என்றான் மறுபடியும். சாந்தினி ஏன் அப்படித் தயங்குகிறாள்? ஏன் அவள் கண்களில் அப்படி பயங்கர சாயை படர்கிறது? அவள் உடல் வேறு 'வெடவெட'வென்று நடுங்குகிறதே! "குழந்தை......அதைக்.....கிழித்துவிட்டது" என்றாள் விம்மல் கலந்த குரலில். "ஆ! குழந்தை கிழித்துவிட்டதா?" என்றுகொண்டே அப்பச்சிளம் குழந்தையைக் கீழே நழுவவிட்டுவிட்டான். 'வீர்' என்று கத்தியது அது. மண்டையில் பலத்த காயம் அதற்கு!

மறுகணம் பாதியில் கிழிக்கப்பட்ட அவ்வழகுச் சித்திரத்தை நடுங்கிய கைகளுடன் பிடித்துக்கொண்டான். கண்ணில் நீராடை படிந்து சொட்டுச்சொட்டாய் நீர்த்துளி உதிர்ந்தது. கிழிந்த சித்திரத்தை இணைத்துவிட்டுப் பார்த்தான். அவன் அழுதான்; சித்திரம் சிரித்தது! 'சித்திரம் மட்டும் சிரிப்பதா? நானும் சிரித்துப் பார்க்கிறேன்' என்று சிரித்தான். ஆனால் வரட்டுச் சிரிப்பு ஒன்றுதான் அவன் உதட்டில் படர்ந்தது. பழைய சம்பவங்கள் யாவும் அவன் கண்முன் நிழலாடின.

ரூபவதி, அரசன் குமாரதேவனின் [illegible] செல்வப்பெண். அவனது முற்[illegible] முதுமையிலேபிறந்தாள்! அரசனின் அன்பணைப்பிலே வளர்ந்தாள். எழிலுக்கேற்ற பெயரைத்தான் வைத்தான் குமாரதேவன். அரசன் பெரும் ரஸிகன். கலைவெறி உள்ளவன். பல ஓவியர்களுக்கு அவன் அரண்மனை உறைவிடமாய் திகழ்ந்தது. அவர்களில் ஒருவன் தான் ஜீவகுமார். கலைவெறி பொங்கி வழிந்தது அவன் உள்ளத்தில். சித்திரக் கலையில் அவனுக்கு ஈடு, இணை அவனே தான். ஜீவகுமாரின் மனதில் கற்பனை கொடிவிட்டுப் படரும். அது 'எழில் சித்திரமாகி' ஓவிய மண்டபத்தை வெகுவாக அலங்கரிக்கும். அரசனுக்கு அவனிடம் பெருமதிப்புண்டு.

ஒருநாள்! தோழி ஒருவள் ஜீவகுமாரின் சித்திரம்ஒன்றைக்கொணர்ந்து 'ரூபாவிடம்' காட்டினாள். 'ஒரு தாய்! அன்பு திளைத்த முகம். கையிலோர் சிறு குழந்தை. பூவிதழ்போன்ற உதடு[illegible] ஒருவித படபடப்பு. வயிற்றில் ப[illegible]ான்றிருக்கிறது. தாயின் மார்பைப்போய் முட்டுகிறது." இவ்வளவு தான் அச்சித்திரம். இவ்விதமான காட்சி என்றும், எப்போதும் காணக்கூடியது தான். ஆனால் அக்கலைஞன் அதிலே இணையற்ற எழிலைக் கண்டான். ரூபாவின் 'கலை உள்ளம்' இதைப் பார்த்ததும் குருகுருத்தது. அவள் உடலில் ஏதோ ஓர் உணர்ச்சி பரவியது. "நானும் ஒரு நாள் தாயாவேன்...எனக்கும் ஒரு குழந்தை..." என்று எங்கெல்லாமோ அவள் எண்ண அலைபாய்ந்து ஓடியது. 'சரேரென்று' அவளுக்கு அவ்வெண்ணம் உதித்தது. 'நான் அவரிடம் சித்திரக்கலை பயின்றால் என்ன?' என்று நினைத்தாள். அரசனும் சம்மதித்துவிட்டான். ஆனாலும் சில போதனைகளைச் சொல்லாமலில்லை. "ரூபா! உன் கலைத்தாகம் எனக்கு பெருமகிழ்ச்சியையளிக்கிறது. ஆனால் அர்த்தமற்ற பயமொன்று என்னை அண்டுகிறது. நீ...அவ்விதம் நடந்துகொள்ளமாட்டாயென்று எனக்குத் தெரியும்...என்ன இருந்தாலும் அவன் முறுக்கேறிய வாலிபன். வேறு என்ன சொல்வது? ஜாக்கிரதையாய் நடந்துகொள். அதிகமான பேச்சுக்கு இடம் கொடுக்காதே. ஏன்? ஜீவகுமாரும் நல்ல பையன்தான். அவன் தகப்பன் நமக்கு எவ்வளவோ அரிய சேவை செய்திருக்கிறான். நாளையிலிருந்து ஆரம்பிக்கச் சொல்கிறேன், நீ போ" என்றான் குமாரதேவன்.

தந்தையின் அன்புப் பெருக்கைக் கண்டு ரூபவதி உள்ளம் பூரித்தாள். "என்னப்பா, அப்படிச் சொல்கிறீர்கள்? போயும் போயும் ஓர் ஏழைச் சித்திரக்காரனிடமா சல்லாபம் வைத்துக்கொள்வேன்?" என்றுகொண்டே ஏளனச் சிரிப்பொன்று சிரித்தாள். அரசனுக்கு அப்படியே உள்ளம் குளிர்ந்தது.

ஜீவகுமாரினால் இதை நம்பவேமுடியவில்லை. யார்? ராஜகுமாரிக்கா தன் பயிற்சி? அவனால் கற்பனைசெய்யக்கூட முடியவில்லை. தன் ஓவியத் திறமையை ரூபாவுமா மெச்சுகிறாள்? அதை நினைக்கும்போதே அவன் உள்ளம் மகிழ்ச்சியால் விம்மியது.

மறுநாள் காலையில் சிற்ப மண்டபத்தில் அவ்வெழிலுருவம் வந்து நின்ற பிறகுதான் தான் காண்பது கனவல்ல; நனவுதான் என்பதை உணர்ந்தான். அவன் உடல் நடுங்கியது. ரூபாவினிடம் பேசக்கூடமுடியாதபடி தொண்டையில் பேச்சு சிக்கியது. ரூபா ஜீவகுமாரை முன்பின் பார்த்ததில்லை. அவனைப் பார்த்தவுடனே அவள் உடலில் இன்ப உணர்ச்சி ஒன்று பாய்ந்தது. அவனது ஒளி தீட்டிய கண் பார்வை அவளைக் கலங்கடித்தது. "ஜீவகுமார்! நீங்கள் தான் இனி என் குரு" என்றுகொண்டே வந்தாள் ரூபா. "நான் குருவா? இல்லை. நான் ஓர் ஏழை ஓவியன்! தங்கள் அடிமை" என்று பதிலளித்தான் ஜீவகுமார். ரூபாவைக் கண்டதுதான். அவனையறியாது அவன் கண்கள் நிலையாய் நின்றுவிட்டன. அந்நடமாடும் சித்திரத்தினின்று பொங்கி வழிந்த அழகு அவன் கண்ணைப் பறித்தது. அழகு கண்டு அவன் மனம் துள்ளியது. அவள் கண்கள் தன்னிடம் வந்து ஏதோ கவிதை இசைப்பதுபோன்றிருந்தது. மைக்கருமை படர்ந்த கருவிழிகளில் தளிர்த்த அழகு கண்டு அவன் கலையுள்ளம் விரிந்தது. கலைக்கண்ணால் தான் பார்த்தான். சுருண்டு படிந்த கூந்தலை அனாயாசமாக தரைவிட்டிருந்த காட்சி அவன் கண்ணைப் பறித்தது. 'அவள் தனது சிஷ்யையாகப்போகிறாளா?' என்பதை நினைக்கும்போதே ஜீவனின் உடல் புல்லரித்தது.

சித்திரக்கலைப் பயிற்சி ஆரம்பமாய்விட்டது. வெகுவாக மின்னல் வேகத்தில் முன்னேறிவிட்டாள் ரூபா. அன்று அவள் தந்தையிடம் சொன்னதென்ன? "ஏழை ஓவியன்...அவனிடமா சல்லாபம்?" இதை அவளேதான் சொன்னாள். இப்போது அதை நினைக்கும்போதே அவளது உள்ளமே விண்டுவிடும் போன்றிருந்தது. இப்போது அதே ஓவியனின் கண் பார்வைக்கு அடிமையாய்விட்டாள். ஏன்? ஜீவகுமாரும் அவளிடம் பேரன்புகொண்டான். அவர்களின் இருதயத்தில் ஊறிய அன்பு காதலாக பரிணமித்ததில் ஆச்சர்யமென்ன? ஒவ்வொருவரது நெஞ்சை ஒவ்வொருவரும் ஸ்பரிசித்தனர். ராஜகுமாரியென்றால் அவளுக்குமட்டும் தனி ஹிருதயமா என்ன? ஜீவகுமாருக்கு முன்னமே மணமாயிருந்தது. இருந்தால்தான் என்ன? அவனது கலை வாழ்வில் ரூபா ஒன்றுவிடில் உலகமே சரிந்துவிடும் போன்ற பிரமை பீடித்தது அவனை. ரூபாவின் மனப்பீடத்தை ஆக்ரமித்துக் கொண்டுவிட்டான் ஜீவகுமார்—அற்ப ஓவியன்! ஆனால் அவனது காதல் நெஞ்சில் சிறிது நடுக்கமிருந்தது.

"எவ்வளவோ இன்பக் காட்சிகளையெல்லாம் பார்க்கிறேன் ரூபா! எவ்வளவோ கற்பனைகள் காண்கிறேன். அவைகளெல்லாம் சித்திரத்தில் அடைபடுகின்றன. ஆனால் இந்தக் கற்பனைக்காக நான் படும் கஷ்டம் எவ்வளவு தெரியுமா? ஆனால் இப்போது தோன்றுகிறது—நீ இருக்கும்போது கற்பனை எதற்கென்று. உன் அழகைக் காண ஆண்டவன் கண் இரண்டைத்தான் கொடுத்தான். இருக்கட்டும். இதனாலாவது திருப்தியடைகின்றேன். பார்க்கிறாயா? நாளை காலையில் என் சித்திரத்தில் நீ அடைபடப்போகிறாய். நான் அப்படியே உன்னை அழகு ததும்பச் சித்தரித்து விடுவேன். ஆனால்...எனக்கு உயிர் கொடுக்கும் திறனில்லையே ரூபா!" என்றான் ஜீவகுமார். "உயிர்தானே! பிரமனை அழைத்தால் வருகிறான்" என்றுகொண்டே முறுவலொன்று செய்தாள் ரூபா.

மறுநாள் ரூபாவின் பிரதியொன்றை பூரிப்புடன் தாங்கிக்கொண்டுவந்தான் ஓவியன். அவளது எழில் நயனங்களில் அவ்வப்போது தோன்றி மறையும் அற்புத பாவங்களைச் சித்தரித்தது கண்டு ரூபா பிரமித்தாள். கண் இமையாது அதையே பார்த்துக்கொண்டிருந்தாள். "என்ன ரூபா? உன்னழகையே நீ பார்த்து பிரமிக்கிறாயா என்ன?" என்று கேலிசெய்தான் ஜீவகுமார். "உம்...மறந்துவிட்டேனே! அவன் வந்திருக்கிறான் விஜயன்! அப்பாவும் அவனிடம் ஏதேதோ அளவளாவிக்கொண்டிருக்கிறார்" என்று பேச்சை மாற்றினாள் ரூபா! "யார் குடிகாரன் விஜயனா? பாவம்! உன்னைப்போய் அவன் காலில் கட்டி வாழ்க்கையைப் பாழ்செய்துவிடப் போகிறாரே உன் தந்தையென்று என் மனம் வெதும்புகிறது..." என்று விம்மல் கலந்த குரலில் சொன்னான் ஜீவகுமார், 'அவனுடன் நான் பிணைவதா?' என்ற நினைப்பே ரூபாவைக் கலக்கியது.

(அடுத்த பக்கம் பார்க்க.)

(முன் பக்கத் தொடர்ச்சி.)

# விடுதலை



கண்ணில் நீர்த்திரை தளும்ப ஓவியனின் கைகளை தன்னுடன் இணைத்துக்கொண்டாள். அவள் கண் பேசிய பாஷையில் நானுவித அர்த்தங்களைக் கண்டான் ஜீவகுமார். பாவம்! 'இவர்கள் சொன்னதையெல்லாம் காதுகொடுத்து மறைவாகக் கேட்டுக்கொண்டிருக்கிறான் விஜயன்' என்பதை ஜீவகுமார் எப்படி அறிவான்? ஆத்திரம் விஜயனை மீறியது. சரேலென்று உள்ளே பாய்ந்தான். திடுக்கிட்டுவிட்டான். ஓஹோ! இதுதான் ஓவியப் பயிற்சியோ?' என்ற இடிக்குரலில் பயங்கரமாய் நகைத்தான் விஜயன், ரூபாவுக்கு உலகமே உருள்வதுபோன்றிருந்தது. ஜீவகுவார் தலைகுனிந்தான். பாவம்! மறுகணம் அவன் காவலில் வைக்கப்பட்டான். விஜயனின் ஆக்ஞையின்பேரில்தான். அரசனின் எதிர்கால மருகனல்லவா?

ரூபாவினிடம் வந்தான் விஜயன். "என்ன ரூபா? அந்த அற்பனிடம் போய் உனக்கென்ன பேச்சு? நீயார்? அவன் நிலையென்ன? அவனுக்குத்தான் என்ன ஆணவம்? அரசனின் உப்பைத் தின்றுவிட்டு அவரது நாசத்திற்கே அடிகோலுகிறான். பார்க்கிறேன். அவன் தலை உருண்டு மண்ணில் படியாவிடில் நான் விஜயனல்ல" என்றுகொண்டே கழுகுக் கண்களை ஓர் உருட்டு உருட்டினான். ரூபாவிற்கு அப்படியே உடல் சிலிர்த்தது. தலை உருளுவதா? அவள் எண்ணங்கள் எங்கெங்கோ சென்றன. ஏன்! விஜயனுக்கு அவ்வளவு அதிகாரமிருந்தது. தந்தையிடம் ஒரு வார்த்தை போட்டுவிட்டால் போதும். அவர் கோபத்தில் எது வேண்டுமானாலும் செய்துவிடுவார். என்னால் அவருக்கு அவக்கேடா? எனக்காக அவர் உயிர் பிரியவேண்டுமா? அவர் ஜீவன் அகன்றால் பாவம்! அவர் மனைவியின் கதி என்ன? என் வாழ்வு நீடித்தாலும் இக்குடிகாரனிடமிருந்து நான் உழல வேண்டும். என் வாழ்வில் இன்பத்தின் திவலையைக்கூட நான் காணமுடியாது. என் எதிர்காலமே முட்புதர்தான். வேண்டாம். இவ்வுலகில் நான் வாழ்ந்தது போதும். என் உயிரை மதித்தால் ஒரு கலைஞனின் வாழ்வு அஸ்தமித்துவிடும். வேண்டாம்! இவ்வுடலைச் சுமந்து நான் அடையப்போவது இன்பமல்ல! பெருந்துன்பம்தான்..." என்று ஏதேதோ எண்ணினாள் அவள். அப்போதுதான் அவ்விடிபோன்ற செய்தி காதில் விழுந்தது. "ஜீவகுமாரின் உயிருக்கு உலைவைத்துவிட்டான் கிராதகன் விஜயன். அரசனின் கோபம் அளவை மீறிவிட்டது. ஜீவகுமாரை விசாரிக்கப் போகிறான். ரூபாவையும் பார்க்க வரப் போகிறான் அரசன்." இச்செய்தி அவள் உயிர்நாடியைப் பிடித்து உலுக்கியது.

ஆம்! அப்போதுதான் அவ்வெண்ணம் சரேரென்று பாய்ந்தது. "இந்த கோரத்தையெல்லாம் பார்க்காதபடி என் உயிரைத் தியாகம் செய்தால்..." அப்போதுதான் பாலும் பழமும் வந்தது. "பால்...எனக்குப் பால்" என்று பைத்தியக்காரியைப்போல நகைத்தாள் ரூபா. அந்தப் பாலில் தான் ஏதோ பொடியை உதிர்த்து நன்றாய் கலக்கினாள். வேறு என்ன? அவள் உயிரை உடலினின்று அகற்றப்போகும் விஷம்தான். ஆம்! தன் உயிரைத் தியாகம்செய்து அவமானத்தைப் போக்கக் கருதினாள். வாயில் வைத்து உறிஞ்சப்போகிற சமயம்... "ரூபா" என்றழைத்துக்கொண்டே விஜயன் வந்தான். "ரூபா! ஒரு நல்ல சேதி! ஓவியனின் தலை நாளை இவ்வேளை மண்ணில் புரளும். ஆணவத்திற்கேற்ற தண்டனை. இதைப்பற்றி யாருக்கும் தெரியாது. ஏன்? அவனுக்கே தெரியாது. 'தெரியப்படுத்தினால் மனம் நோகும்' என்றெண்ணித் தான் அறிவிக்கவில்லை. என்ன ரூபா? பாலா குடிக்கப்போகிறாய்? எங்கே? உன் அமுதக் கைகளால்...ஒரு துளி அன்புடன் கொடுக்கமாட்டாயா, கண்ணே?" என்று குழைந்து கேட்டான் விஜயன். ரூபாவிற்கு தலைகால் புரியவில்லை. 'என் கையால் பால் வேண்டுமாம்' என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டாள். "இதோ! இந்த அடிமையின் கையினால் கொடுக்கக் கொடுத்துவைத்தேனே! இந்தாருங்கள்" என்று கிண்ணத்தில் ஊற்றிக் கொடுத்தாள். அவன் உறிஞ்சினான். பால் அவன் உயிரை உறிஞ்சிவிடப்போகிறதென்று அவனெப்படி அறிவான்? சற்று நேரம் கழித்து "ரூபா! ஏதோ மயக்கமாய் வருகிறது. சற்று படுக்கட்டுமா?" என்றுகொண்டே மலரணையில் சாய்ந்தவன் ஒரேயடியாய்ச் சாய்ந்துவிட்டான். அதற்குள் ரூபா ஒரு கடிதம் எழுதினாள்—ஜீவகுமாருக்குத்தான்.

அன்ப,

தங்களது கலை வாழ்வில் ஒன்றமுடியாத பாவியாய்விட்டேன். என் தந்தை என்னிடம் அன்புள்ளவர்தான். ஆனால் இக்குடிகாரனின் காலில் கட்ட பிடிவாதம் கொண்டுவிட்டார். அவனுடன் நான் பிணைந்து வாழ்நாள் முழுவதும் கஷ்டப்படுவதை நீங்கள் சகிக்கமாட்டீர்கள். தற்செயலாய் விஜயன் வந்தான்... நான் சாப்பிடவிருந்த விஷம் கலந்த பாலை அவன் சாப்பிட்டுவிட்டு மலரணையில் பேருறக்கம் கொண்டுவிட்டான். நானும் மரணப் பிடியினின்று தப்பமுடியாது. மிஞ்சியிருந்ததை நான் உட்கொண்டுவிட்டேன்...என் ஆத்மா சாந்தியடைந்துவிடும். இதைக் கேட்க உங்கள் உடல் பதறும். உள்ளம் வெடிக்கும். நீங்களும் எனக்காக உயிரைத் தியாகம் செய்வீர்கள். ஆனால் சற்று நினைத்துப்பாருங்கள். ஒரு சிசுவைச் சுமந்துகொண்டிருக்கிறாள் உங்கள் மனைவி! அந்த ஆவி அணையவேண்டாம்!...என் ஆத்மா சாந்திபெறவேண்டுமானால் நீங்கள் உயிர்தாங்கி என் உருவை நெஞ்சில் பதித்துக்கொள்ளவேண்டும்... இது கண்டதும் சிறையினின்று வெளியேறி அயல்நாடு சென்றுவிடுங்கள்! எங்கள் தந்தை மன்னித்துவிடுவார்!

தங்கள் அன்பின் அடிமை,

ரூபவதி.

அரண்மனைச் சேவகர்களை அனுப்பி இக்கடிதத்தைக் கொடுத்துவிட்டு ஜீவகுமாரை விடுதலை செய்யச்சொல்லிவிட்டாள். அதுவரையும் அவள் உயிர் காத்திருந்தது. பிறகு அது கூண்டைவிட்டு சிறகடித்துப் பறந்துவிட்டது.

கடிதம் கண்டார் ஜீவகுமார். உயிர் பதைத்தான். நெஞ்சில் ஈட்டி பாய்வது போன்றிருந்தது. அவன்தான் என்ன செய்வான்? ரூபாவின் எண்ணத்தைப் பூர்த்திசெய்யவேண்டியதே அவன் அவளுக்குச் செய்யும் கடமை. புழுப்போல துடித்தான்....

வருடங்கள் உருண்டோடின. ஒவ்வொரு கணமும் அவன் உயிரைச் சித்திரவதைசெய்துகொண்டே கழிந்தது. அவன் வாழ்விலே சோகத்திரை படிந்தது படிந்ததுதான்! எப்போதாவது ரூபாவின் ஞாபகம் வந்தால் அவளது சித்திரத்தை வைத்துக்கொண்டு கண்ணீர் வடிப்பான். அவன் நெஞ்சு அதனுடன் சற்று உறவாடும். இதுவரை அச்சித்திரமாவது அவனுக்கு ஆறுதலையளித்தது. இப்போதுதான் அது சிதைந்துவிட்டதே! இனி அவன் வாழ்வில் ஆறுதல் ஏது?



**தீய எண்ணங்களைத் தாளிட்டுப் பூட்டுதற்குரிய திறவுகோல் (சாவி) மாந்தரிடையே இருக்கிறது என்பதில் எனக்கு ஐயமேயில்லை. ஆனால் அதை ஒவ்வொரு மனிதனும் தானே முயற்சித்து அடைதல் வேண்டும். மகான்கள் தங்களுடைய வாழ்க்கையின் அனுபவங்களை நம் பொருட்டு நல்கிச் சென்றுள்ளார்கள். ஆனால் அதை எல்லோருக்கும் பொதுவாகவும், பொருந்தியதாகவும் இல்லை. ஆண்டவனின் அருளினாலேயே குற்றத்தினின்றும் விடுதலை பெற முடியும். அத்தகைய அருள் பெற்ற பெரியோர்கள் 'ராம நாமம்' போன்ற மந்திரங்களை நமக்கு உதவியுள்ளார்கள். அம்மந்திரங்களிலேதான் அவர்களின் தவமும், தூய்மையும் பொலிந்து கிடக்கின்றன. ஆண்டவனின் முன் ஆன்ம நிவேதனஞ் செய்யாதவரையில் மனத்தை முற்றும் கட்டுப்படுப்படுத்த இயலாது. சமய நூல்கள் யாவும் இதையே அறிவுறுத்துகின்றன. முழு பிரம்மச்சரியத்தை குறிக்கொண்டு முயன்றுவரும் ஒவ்வொரு பொழுதும், இவ்வுண்மையை யான் தெளிந்து வருகிறேன்.**

**—காந்திஜி.**

## நோட்டீஸ்.

அரியலூர் டி. மு. கோர்ட்டு.

O. S. No. 479/1944

கணபதி அய்யர் —வாதி

1. கிருஷ்ண சாஸ்திரி 2. ராமசந்திர அய்யர் 3. அய்யாக்கண்ணு சாம்பான் 4, நாகமுத்து சாம்பான்

—பிரதிவாதிகள்.

ஷை நம்பர் வாதி வக்கீல் V. சாமிநாத அய்யர் அவர்கள் கொடுத்த நோட்டீஸ் ஷை நம்பரில் வாதி பிரதிவாதிகள் பேரில் பெந்தக ஆதாரவுப்படி தொகை கிடைக்க தாவா செய்து ஷை நெ. 3 4 பிரதிவாதிகள் சம்மனை ஒட்டி சார்வுசெய்ய உத்திரவாகி ஷை நம்பர் 21—3—45 தேதி ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிற விபரம் இதனால் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

அரியலூர், 8—3—45. V. Swaminatha Iyer, Pleader, Plff.

(2-ம் பக்கத் தொடர்ச்சி.)

## அகமும் புறமும்

நலனுக்கு விரோதமாக நடந்துகொள்கின்றது என்று அர்த்தமாகிறது. இந்திய அரசாங்கம் இங்ஙனம் ஏன் நடந்துகொள்கிறது என்று கேட்கிறோம்? நாட்டில் உற்பத்தியாகக்கூடிய பண்டங்களை இங்ஙனமாக இறக்குமதிசெய்து வளரும் தொழில்களுக்கு முட்டுக்கட்டை போடுவது மகா பாபம் என்று எச்சரிக்கை செய்கிறோம்.

### பிரிட்டிஷ் வியாபாரத்திற்குப் பாதுகாப்பு

இந்திய அரசாங்கத்தார் யுத்த பிற்காலத் திட்டங்களைப்பற்றிப் பிரமாதமாகப் பேசிவருகின்றனர். நிர்மாணத் திட்ட அங்கத்தினரான சர். அர்தேசிர்தலால் இந்தியத் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதே அரசாங்கத்தின் நோக்கம் எனக் கூறிவருகின்றார். சொல்லைச் செயலில் காட்டக் காலம் வரும்போது என்னவெல்லாம் நடக்குமோ யார் அறிவர்? அசல் இந்தியத் தொழில்களுக்குப் பாதுகாப்பளிக்கவேண்டுமானால் 1935ம் வருடத்து இந்திய அரசாங்க அமைப்புச் சட்டத்தில் காணப்படும் அநியாயமான விதியொன்று ரத்தாகவேண்டும். இந்தியாவில் அயல்நாட்டுக் கம்பெனிகள் நடத்தும் தொழில்கள் நடத்தி வியாபாரம் செய்வதைப் பாதிக்கும்படியான எவ்விதச் சட்டத்தையும் இந்திய சட்டசபை செய்வதற்கு அதிகாரமில்லை என்பதே அவ்விதி. அவ்விதி அயல் நாட்டு முதலாளிகளுக்கு போராதரவு தருகின்றது. அதன்கீழ் இன்று பல பிரிட்டிஷ் கம்பெனிகள் இந்தியாவில் மூலதனம்போட்டுத் தொழில்கள் நடத்தியும் வியாபாரம் செய்தும், சுதேசத் தொழில்கள்போலப் பாதுகாப்புப்பெற்றும் கொள்ளை லாபமடித்து வருகின்றன. இக்கொள்ளை லாபம் சீமைக்குப் போகின்றது; இங்கிலாந்தின் வருமானத்தை அதிகரிக்கின்றது. இவ்வன்னியத் தொழில்கள் இந்தியாவில் ஆக்கம் பெறுவதாலும், அரசாங்கத்தின் ஆதரவு பெறுவதாலும், அசல் சுதேசத் தொழில்கள் தலைதூக்கமுடிவதில்லை. அன்னியத் தொழில்கள் அசல் சுதேசத்தொழில்களுடன் பலமாகப் போட்டியிட்டு அவற்றை நசுக்கிவிடுகின்றன. அயல் நாட்டுக் கப்பல் கம்பெனிகள் எங்ஙனமாகவெல்லாம் சுதேசக் கப்பல் கம்பெனியாகிய சிந்தியா நாவிகேஷன் கம்பெனியை அழிக்க முயன்றனவென்பது சரித்திரப் பிரசித்தம். இந்திய அநீதமான போட்டியைத் தடுக்கவேண்டுமென வலியுறுத்தப்பட்டது. பிரிட்டிஷ் முதலாளிகள் வெருண்டனர். பிரிட்டிஷ் அரசாங்கத்தினரை முடுக்கினர். அவர்கள் அவர்களின் உதவிக்கு வந்து இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் மேற்சொன்ன பாதுகாப்பளித்தனர். இந்த அநீதியான விதி அப்படியே அமுலிலிருக்குமானால் இந்தியத் தொழில்களுக்குப் பாதுகாப்பளிப்பது என்பதெல்லாம் வெட்டிப்பேச்சு.

சில ஆண்டுகளுக்குமுன் காப்பு வரி விதித்து இந்தியத் தொழில்களுக்கு ஆதரிக்கும் உரிமை இந்திய அரசாங்கத்துக்கு அளிக்கப்பட்டபோது, அதன் பலனையடைய அயல்நாட்டு முதலாளிகள் இந்தியாவில் 'இந்தியக் கம்பெனி'களை அமைத்தனர். இன்று தோல் ஆலை வைத்து கொள்ளை லாபம் அடித்துவரும் பாட்டா கம்பெனி அயல்நாட்டு கம்பெனியேயாகும். அது இங்கே நிலைத்துவிட்டபின் அசல் இந்தியத் தொழில் இனி எங்ஙனம் தலைதூக்கமுடியும்? ஒரு அயல்நாட்டுத் தீப்பெட்டி கம்பெனி இங்கே நிலைத்து சுதேசத் தீப்பெட்டிக் கம்பெனிகள் பல திவாலாய்ப் போகச் செய்துள்ளது. லீவர் பிரதர்ஸ் கம்பெனி என்னும் அயல்நாட்டுக் கம்பெனி சோப்புத் தொழில் நடத்தி 42 சுதேச சோப் ஆலைகள் அழியும்படிச் செய்துள்ளது. இங்ஙனமாகப் பல உதாரணங்கள் கூறிக்கொண்டேபோகலாம். இங்ஙனம் அயல் நாட்டு முதலாளிகள் நம் தொழில்களை வாயில் மண்ணையள்ளிப்போட்டு இங்கே இந்திய அரசாங்கம் அளிக்கும் பாதுகாப்பை அனுபவித்து கொள்ளை லாபமடித்துவருகின்றனர். வேறெந்த நாட்டிலும் இந்த அநீதி நடைபெறுவதில்லை.

இந்திய நிர்மாணத்திட்ட அங்கத்தினரான சர். அர்தேசிர்தலால், இந்த அநீதியான நிலை ஒழிந்தால்தான், அசல் இந்தியத்தொழில்கள் வளருமென்பதை ஒப்புக்கொண்டிருக்கிறார். பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் பேசி ஒருவித ஏற்பாட்டுக்கு வரவேண்டுமென்று கூறுகிறார். இச்சட்டத்தை ரத்துசெய்ய வேண்டுமென இந்தியத் தலைவர்கள் கேட்கின்றனர். ஆனால் அதற்கு சர் தலால், யுத்த காலத்தில் அது எப்படி முடியுமென்கிறார். ஆனால் இந்த யுத்தகாலத்தில்தான் எமரி துரையவர்கள் இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் பல மாறுதல்கள் செய்திருக்கிறார். ஆனால் அம்மாறுதல்கள் யாவும் பிரிட்டிஷ் அரசாங்க நன்மை கருதியேதான். சின்னஞ் சிறு சுதேச சமஸ்தானங்கள் இணைப்புச் சட்டம், எஸ்டேட்டு வரிச்சட்டம், கவர்னர்களுக்கு அதிக அலவன்சு தரும் சட்டம் இவை சில உதாரணங்கள். மனமிருந்தால் யாவும் செய்யலாம்.

### சட்டசபையில் சர்க்கார் தோல்விகள்

இந்திய அரசாங்கம் இந்திய மக்களுக்குப் பொறுப்பேற்கவேண்டிய அவசியமில்லை. ஆதலால் இந்திய சட்டசபையில் ஜனப்பிரதிநிதிகள் கரடியாகக் கத்தினாலும், அரசாங்க பட்ஜட்டைத் தாக்கிப் பல வெட்டுப் பிரேரணைகள் கொண்டுவந்து சர்க்காருக்குத் தோல்விக்குமேல் தோல்வி ஏற்படுமாறு செய்தாலும், இன்னும் என்ன செய்தாலும், அரசாங்கம் பொருட்படுத்தத் தேவையில்லை. சட்டப்படி ராஜப்பிரதிநிதி சர்டிபிகேட்செய்து சட்டசபை மறுத்த மானியங்களைத் திரும்ப அளித்துவிடலாம். ஒவ்வொரு தடவையும் இங்ஙனமாகவே நடந்துவருகின்றது. இவ்வாண்டும் இவ்விதமாகவே நடக்கப் போகிறது.

ஆனால் உலக நிலையை உத்தேசித்து பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு நண்பன் என்ற முறையில் சிவாஜி ஓர் எச்சரிக்கை செய்ய விரும்புகிறது. உலகமெல்லாம் கொந்தளித்துக்கொண்டிருக்கிறது. என்னதான் இந்தியாவை அடக்கினாலும் அதன் உள்ளத்தில் பொங்கியெழும் ஆர்வத்தையும் கொந்தளிப்பையும் அமுக்கிவிடமுடியாது. இந்திய சட்டசபையில் ஜனப்பிரதிநிதிகள் ஆவேசமாகப் பேசியிருப்பதையும், மக்கள் பஞ்சத்தாலும், யுத்தத்தின் காரணமாகவும் நொந்து வருந்திக்கொண்டிருக்கையில், அவர்கள்மீது தாங்கமுடியாத சுமையைச் சுமத்திவருவதைப் பலமாகக் கண்டித்திருப்பதையும், மக்கள் வெளிப்பார்வைக்கு அமைதியாக இருந்தாலும் உள்ளத்தில் நாளுக்கு நாள் நிராசையும்; வெறுப்பும் அதிகரித்துவருவதையும், கண்டும் காணாமலிருப்பதுபோலிருந்துவிடுவது புத்திசாலித்தனமாகாது. சர்க்காரின் நல்லபிள்ளையான சர். சபருல்லா கான் ஏகாதிபத்திய மகாநாட்டில் செய்துள்ள எச்சரிக்கையை கருத்துட்கொண்டு உடனே ஏதாவது செய்வதே நல்லதாகும். லண்டன் டைம்ஸ்கூட அரசாங்கத்துக்கு எச்சரிக்கைசெய்துள்ளது. கடைசி நேரத்தில் செய்யப்படும் இவ்வெச்சரிக்கைகளையும் அசட்டை செய்வது பேராபத்தாகும். அண்மையில் காமன்சு சபையில் எமரி பேசியிருப்பதிலிருந்து நம்பிக்கையொன்றும் காணமுடியவில்லை. அமெரிக்காவில் பணத்தை வாரியிறைத்து இந்தியாவுக்கு எதிராகப் பிரசாரம் செய்தும், சுதந்திர வீரரான நேருவைச் சிறையில் வைத்தும், சில கோடரிக்காம்புகளை வைத்துக்கொண்டு காரியங்களைச் செய்தும் நிலைமையை நீண்டகாலம் சமாளிக்கலாமென்று எண்ணுவது மடமையாகும். அமெரிக்கா பிலிப்பைன்ஸ் விஷயமாக நடந்துகொள்வதைப்போலவே பிரிட்டன் இந்தியா விஷயத்திலும் நடந்துகொள்ளவேண்டும். நிலைமை கெட்டுக் குட்டிச்சுவராகப்போகும்வரையில் பிரிட்டன் இணங்குவதில்லை என்பர். இந்தியாவின் நிலைமை இன்னும் இந்த கதிக்கு வரவில்லையென்றே எமரியும் சர்ச்சிலும் நம்புகின்றனர்போலிருக்கிறது. நிலைமை குட்டிச்சுவராகிவருவதைக் கண் திறந்து பார்த்து உடனே ஏதாகிலும் செய்தால், ஆபத்தை விலக்கலாமென மீண்டும் எச்சரிக்கைசெய்கிறோம்.

★

## மணி மொழிகள்

"குமார்" திரட்டியது

★

மத ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பது இரும்பு பார்க்கும் முறையை ஒக்கும். உருக்கும் பொழுது இரும்பு கொஞ்சம் கொஞ்சமாக அசுத்தம் நீங்கி பரிசுத்தம் அடைகிறது. அந்த சுத்த உலோகத்தைக் கொண்டு செய்யப்படும் சாமான்களும் நன்றாகவே யுள்ளன. ஞான மார்க்கமும் அவ்வாறே படிப்படியாய் உள்ளன. மாசை அகற்றிவிடா முயற்சியினால் தூய்மையான பகுத்தறிவை எய்துகிறோம்.

—புத்தர்.

கண் சரீரத்தின் விளக்காக விளங்குகின்றது. உன் கண் தெளிவாக இருந்தால் உன் சரீர முழுவதும் ஒளி நிரம்பியிருக்கும்; கண் வெளிவற்று கெட்டிருப்பினும் உன் சரீரம் ஒளி யுள்ளதாகவே இருக்கும். ஆனால் உன் சரீரத்தினுள்ள ஒளி குன்றி இருளுண்டாகுமாயின் அவ்விருள் எவ்வளவு அதிகமாக இருக்கும்!

—ஏசுநாதர்.

